வாழ்க்கையில் சுயமாக வளம் பெறும் ஆடவர் ஒருவர்...

...அதற்குத் துணை செய்ய அழகான ஆடைகளையும் அணிகிறார்!




நிச்சயமாக, மஃபத்லால் க்ரூப் அளிப்பவை நேர்த்தியான துணிமணிகள்தான்!

AIYARS-M.461 TM

# கேள்வித்தாளின் கோரிக்கை!

வங்காளத்தைச் சேர்ந்த பர்துவான் மாவட்டத்தில் உள்ள கல்லூரி ஒன்றில் பி.ஏ., பி. எஸ்ஸி. பட்டத்துக்கான இறுதி ஆண்டுப் பரீட்சைகள் நடைபெற்றன. அப்போது மாணவர்கள் இரவு எட்டு மணி வரையில் புத்தகங்களைப் பார்த்து விடைகளைக் காப்பி அடித்துக்






கொண்டிருந்தார்கள். அப்படியும் எல்லாக் கேள்விகளுக்கும் பதில்கள் எழுத அவகாசம் போதவில்லை. எனவே, கேள்வித் தாள்களையும், விடைத் தாள்களையும் வீட்டுக்கு எடுத்துச் சென்று விடைகளைப் பூர்த்தி செய்து மறுநாள் காலை கொண்டு வந்து கொடுத்தார்கள்.

பரீட்சை ஹாலில் மேற்பார்வை செய்து வந்த ஆசிரியர்கள் விடையாக எழுத வேண்டிய வாக்கியங்களைப் புத்தகத்திலிருந்து எடுத்துக் காண்பிக்கும்படி வற்புறுத்தப்பட்டார்கள்.

இந்தச் செய்தியைப் படித்த போது மாணவர்களே விடைகளைத் தங்கள் கையாலேயே சிரமப்பட்டு எழுதியிருக்கிறார்களே என்று ரொம்ப சந்தோஷப்பட்டேன். கை வலிக்கிறது என்று காரணம் காட்டி உதவிக்கு ஆள் வைத்துக் கொள்ளவில்லையே அவர்கள்! அடாடா! உழைப்புக்கு அஞ்சாத உத்தமர்கள்!

பரீட்சையில் ஏமாற்றுவது என்பது இப்போது ஒரு பெரிய கலையாகிவிட்டது.

நியூரெம்பர்க் என்ற ஜெர்மன் சர்வகலாசாலைப் பரீட்சைகள் நடந்து கொண்டிருக்க போது ஒரு மாணவன் தன் இடது கையில் ஒரு பெரிய 'பாண்டேஜ்' கட்டுடன் உட்கார்ந்திருந்தான். அந்தக் கட்டுக்குள் மைக்ரோபோன் பொருத்தப்பட்டிருந்தது. சீக்கிரமே விடைகள் எழுதி விட்டுச் சென்ற அவன் நண்பன் ஒருவன் வெளியே இருந்தபடி விடைகளை ஒலிபரப்பினான். எர்வின் தன் பாண்டேஜ் கையைக் காதுப் பக்கம் அழுத்தி வைத்துக் கொண்டு விடைகளைக் கேட்டு எழுதினான்.

இந்தியா உள்படப் பல நாடுகளில் சில கம்பெனிகள் மாதிரி வினாத் தாள்களைத் தயாரித்து விற்கின்றன. அந்த வினாக்களுள் பாதிக்கு மேல் பரீட்சை வினாத் தாளில் கேட்கப் படுபவையாகவே இருக்கும்.

ஆனால் அவற்றுக்கு விடைகள் தயாரித்துப் படிக்க நேரம் இல்லாமல் சினிமா பார்த்துக் கொண்டிருப்பவர்கள் காப்பி அடிக்காமல் என்ன செய்ய ?

அமெரிக்க செனட்டர் ராபர்ட் கென்னடி ஹார்வர்ட் சர்வகலாசாலையில் படித்துக் கொண்டிருந்தபோது அந்நிய பாஷைப் பரீட்சை ஒன்றுக்குத் தமக்குப் பதிலாக வேறு ஒரு மாணவனை அனுப்பிப் பதில்கள் எழுதச் செய்தாராம். இதை அவரே ஒப்புக் கொண்டிருக்கிறார்.

பரீட்சை வினாக்கள் தயாரிப்பது, விடைகளை மதிப்பீடு செய்வது சம்பந்தமாக மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் ஆந்திரா சர்வகலாசாலை ஒரு கருத்தரங்கு நடத்தியது. அமெரிக்க மிச்சிகன் சர்வகலாசாலையைச் சேர்ந்த பேராசிரியர் வாக்கர் ஹில் அதில் தீவிரமாகப் பங்கு கொண்டார்.

ஒரு வினாத்தாளுக்கு ஒரு குறிப்பிட்ட மாணவர் எழுதிய விடைகளின் பல பிரதிகள் எடுக்கப்பட்டன. தொண்ணூறு ஆசிரியர்களிடம் கொடுக்கப்பட்டன. திருத்தியவர்களில் ஒருவர் 'டிஸ்டிங்ஷன்' மார்க் கொடுத்திருந்தார். சிலர் முதல் வகுப்புக்கான மார்க்குகள் போட்டிருந்தார்கள். பலர் இரண்டாம் வகுப்புக்கான மார்க்குகளும், மற்றவர்கள் மிக மிகக் குறைந்த மார்க்குகளும் அளித்திருந்தனர்.

ஸர் வின்ஸ்டன் சர்ச்சில் வினாத் தாள்களைப் பற்றிக் கூறினர்: ''பரீட்சைகளில் எனக்குத் தெரிந்ததைப் பற்றிக் கேட்டிருந்தால் நான் உற்சாகத்துடன் என் அறிவை வெளிப்படுத்தி எழுதியிருப்பேன். ஆனால், பரீட்சைத் தாளாசிரியர்கள் என் அறியாமையை அல்லவா பரீட்சை பார்ப்பதில் முனைகிறார்கள்?''

இப்படியாக வினாத்தாள்களாகிய நாங்கள் பலருடைய பழிச் சொல்லுக்கு ஆளாகி வருகிறோம். யுனிவர்ஸிடி கிராண்ட்ஸ் கமிஷன் கிரேட் முறையைப் புகுத்த விரும்புகிறது.

அதன்படி பரீட்சைகள் என்பன இரா. ஒவ்வொரு மாணவனும் மிகவும் கெட்டிக்காரன், கெட்டிக்காரன், சுமாரானவன், மோசம்... என்று பாகுபாடுகளுக்குள்ளாவான். இந்த முறையைப் பல மாணவர்கள் வரவேற்கிறார்கள். ஏனென்றால் பலவீனமான மனமுடைய ஆசிரியர்களைத் தாஜா செய்தோ, பயமுறுத்தியோ, மற்ற விதங்களைக் கொண்டோ உயர்ந்த கிரேடில் தங்களைப் போடச் செய்துவிடலாம் அல்லவா ?

— அனாமதேயம்

இந்தியாவிலும். அயல்நாடுகளிலும்
இப்பொழுது அதிகமான அளவில்
தேவைப்படுகிறது இந்த
தேங்காய் நார்

Ennor

இயந்திரங்கள்—
தேங்காய் நார்
தயாரிக்க.



Crusher

adsindia

# குறைந்த முதலீட்டில் சிறந்த முறையில் தேங்காய் நார் தயாரிக்க இயந்திரங்கள் இதோ!

தேங்காய் நார் தயாரிக்க இந்தியாவில் இதுவரை சரியான இயந்திரங்கள் இல்லாமல் இருந்தது. அதிக அளவு உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்ய முடியாமல் இருந்தது.

இப்பொழுது இதற்குத் தேவையான எல்லா இயந்திரங்களையும் நாங்கள் தயாரித்துள்ளோம். இதன் மூலம் நீங்கள் குறுகிய காலத்தில் அதிக அளவு தேங்காய் நார் உற்பத்தி செய்யலாம். அதிக அளவு ஏற்றுமதியின் மூலம் அதிக வருவாய் தேடிக் கொள்ளலாம்...
உங்களுக்கும் உங்கள் தேசத்திற்கும்!

இதுவரை தென் இந்தியாவில் 12 இடங்களில் எங்கள் என்னூர் இயந்திரங்கள் நல்ல முறையில் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன

மற்ற விபரங்களுக்கும் சரியான ஆலோசனைக்கும் எங்களை அணுகுக:

Manufacturers:
**BHARAT MOTORS**
5, Greames Road, Madras-600006
Phone: 86204 Cable: FIBRO-FLEX



Turbo Cleaner



Defibering Machine



Revolving Screenur



Fibre Baling Press

அன்றாடம்
வெண்மை
வேண்டும்
எனக்கு

# அன்றாடப் பருத்தி ஆடைகளை வெண்மை பளிச்சிட வெளுப்பது

# ரின்ஸோ

அன்றாடம் உபயோகிக்கும் பருத்தித் துணிகளின் பிரச்சினை இது: தினமும் அழுக்கேறும், தினமும் வெளுப்பாக்க வேண்டும். இதற்கு விடை: திட வலிமை வாய்ந்த ரின்ஸோ... அழுக்கை வெளியேற்றி, வெண்மை பளிச்சிட வெளுக்கிறது! மிகச் சிறந்த சோப்பையும் மிஞ்சும் திறனுக்கு உத்தரவாதமானது ரின்ஸோ. விலையோ, மற்ற சலவைப் பவுடர்களை விடக் குறைவுதான்.




மேலும அதிக வெண்மை பளிச்சிட வேண்டுமா? செய்துபாருங்கள்.

## வெந்நீரிலே ரின்ஸோ சலவை

சூடான வெந்நீரிலே ரின்ஸோ போட்டு நன்றாகக் கலக்குங்கள். குறைந்த பட்சம் ½ மணி நேரமாவது ஊறவிடுங்கள், எப்போதும்போல சலவை செய்யுங்கள். பருத்தித் துணிகள் பளிச்சிடக் காண்பீர்கள்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-RINSO-6-140 TM

# கல்கி

ஆனந்த மாசி, 4 ★ பிப்ரவரி 16, 1975

''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே! சம்பவங்களும் கற்பனையே.




## அடுத்த இதழில்:



### ஆயிரம் பிறை காணும் ஆசார்யாள்

வண்ணப் படம் — விசேஷக் கட்டுரை



**ஜனாதிபதி ஜோக்ஸ்**

— ராஷ்டிரபதி மாளிகையில் நடைபெற்ற நகைச்சுவை நிகழ்ச்சிகள்

**இளவல் வருகிறார்!**

— பிரிட்டிஷ் இளவரசர் சார்லஸ் இந்தியா வருவதையொட்டி ஒரு புகைப்படத் தொகுப்பு





திருச்சி புனிதவளனார் காலனியில் பேராசிரியர் டாக்டர் V. K. ரங்கநாதன் M.B.B.S., D.M.R. அவர்கள் குமாரன் சிரஞ்சீவி V. R. ராமனுஜுக்கும் (Madras Refineries Ltd., Manali). டில்லி ஸ்ரீ வரதராஜ அய்யங்கார் அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி V. பூமாவுக்கும் ஸ்ரீரங்கத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும் அதையொட்டி அன்று மாலை நடைபெற்ற வரவேற்புக்கும் நகரப் பிரமுகர்களும், அரசியல் தலைவர்களும், உறவினர்களும், நண்பர்களும் வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர்.

# அபார வளர்ச்சி...

# விஜயா பாங்கின்

## டிபாசிட்டுகள்

## ரூ108

## கோடிகளாக

## ஓங்கி

## உயர்ந்துள்ளன



நற்பணி வெற்றிக்கு வழிகாட்டி—விஜயா பாங்கின் அபார வளர்ச்சி இதை நிரூபிக்கிறது.

1962-ம் ஆண்டு ஆரம்பத்தில் சுமார் ரூ. 1.4 கோடிகளாக இருந்த டிபாசிட் தொகை இப்பொழுது ரூ. 108 கோடிகளை தாண்டியுள்ளது. அப்பொழுது விஜயா பாங்கிற்கு 21 கிளைகளே இருந்தன — அநேகமாக எல்லாமே கர்நாடக மாநிலத்திலேயே. இப்பொழுதோ நாடெங்கிலும் 295 கிளைகள் உள்ளன. மற்றும் உலகெங்கும் நிருபர்களும் உள்ளனர்.

எந்த அளவுகோலால் பார்த்தாலும் இது முன்னேற்றமே. இம்முன்னேற்றம் பாங்கியின்மேல் உங்களிடையே வளர்ந்து வரும் நம்பிக்கையைப் பிரதிபலிப்பதோடல்லாமல், பாங்கியின் துறுதுறுப்பையும், பணியே பெரிதென்றிருக்கும் தன்மையையும் எடுத்துக்காட்டுகிறது.

**விஜயா பாங்க் லிமிடெட்**

ரிஜிஸ்டர்டு ஆபீஸ்: லைட் ஹவுஸ் ஹில் ரோடு, மங்களூர்-575003.
அட்மினிஸ்ட்ரேடிவ் ஆபீஸ்: 2, ரெசிடென்சி ரோடு, பெங்களூர்-560025.

சேர்மன்: எம். சுந்தர் ராம் ஷெட்டி

# ரூ108,00,00,000

OBM: 297/TH

# புரியவில்லை, பிரதமரே!

கல்கி

மலர் 34

இதழ் 29



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

தேர்தல் நெருங்குவதால் ஏற்பட்ட பதற்றத்துடன் ஜபல்பூர் தோல்வியும் சேர்ந்து கொண்டதுதான் காரணமோ என்னமோ, பிரதமரின் சமீபத்திய சொற்பொழிவுகள் மூன்றாம் தர, நாலாம்தர அரசியல்வாதியின் பேச்சுக்களைப் போல் தொனிக்கின்றன.

கேத்ரி நகரில் பேசும்போது பிரிவினைச் சக்திகளுடன் போராட மக்கள் படை திரண்டெழ வேண்டும் என்று கூறியிருக்கிறார். பிரிவினை பற்றிப் பேசுவதோ அதற்கு வித்திடுவதோ அல்லது உழைப்பதோ அரசியல் சட்டப்படி குற்றம் என்னும்போது அத்தகைய காரியங்களில் ஈடுபடுவோரைப் பிடித்துத் தண்டிக்கத்தான் போலீஸும், தேவையானால் ராணுவமும் கூட உள்ளனவே. அவ்வாறிருக்க மக்கள் படை என்று தனியே ஒன்றை உருவாக்குவது பற்றிப் பிரதமர் யோசிப்பாரேயானால் அவர் நமது மதுரை முத்து, வேலூர் நாராயணன் நிலைக்கு இறங்கி விட்டார் என்றாகும். பேசியதோடு இந்த விஷயத்தைப் பிரதமர் மறந்துவிடுவார் என்று நம்புவோம்.

அதே கூட்டத்தில் பிரதமர், அரபு நாடுகள் எண்ணெய்விலையை உயர்த்தியதில் தவறு ஒன்றுமில்லை என்றும் சொல்லியிருக்கிறார்! உலக நாடுகள் அனைத்தின் பொருளாதாரச் சூழலும் நாசமாகும் விதமாக நடந்து கொண்டுள்ளன அரபு நாடுகள். முன்னேற்றமடைந்த நாடுகள் மட்டுமின்றிப் பாரதம் போன்ற அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகளும் சொல்லொணாக் கஷ்டம் அனுபவிக்கின்றன. அதே சமயம் அந்த அரபுநாடுகள் இப்போது அதிகப்படியாகக் கிடைக்கும் கோடானு கோடி டாலர்களையும் ஸ்டர்லிங்குகளையும் வைத்துக் கொண்டு என்ன பண்ணுவது என்று தெரியாமல் விழிக்கின்றன. அந்த அளவுக்குப் பணத்தில் உழலும் அரபு நாடுகளுக்குப் பிரதமர் பரிந்து பேசுவது விந்தையிலும் விந்தை.

இதுவும் போதாதென்று பிரதமர் ஜெயப்பிரகாசரின் இயக்கத்தைப் பழித்துரைத்து விட்டு இத்தகைய புரட்சிகளால் பொருளாதார நெருக்கடிகள் தீர்ந்துவிடப் போவதில்லை என்று பேசியிருக்கிறார். புரட்சி மூலம் பொருளாதார நெருக்கடியையும் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் நீக்கப் போவதாக ஜே. பி. என்று சொன்னார்? நாடு நலம் பெற ஏற்ற நல்ல யோசனைகளை, முக்கால் கம்யூனிஸ்டு முழு கம்யூனிஸ்டுகளின் வலையில் சிக்கியுள்ள பிரதமர் கேட்க மறுப்பதால் தானே ஜே. பி. இயக்கம் நடத்த வேண்டியிருக்கிறது? அறிஞர்களின் பேச்சுக்குப் பிரதமர் மதிப்பளிப்பாரேயானால் நாளைக்கே ஜெயப்பிரகாசர் தமது இயக்கத்தை மூட்டை கட்டி வைத்துவிட மாட்டாரா?

பிரதமர் மேலும் கூறுகிறார், எதிர்க்கட்சிகளுக்கு திட்டவட்டமான பொருளாதாரக் கொள்கை ஏதும் கிடையாதாம்! ஜனசங்கத்தின் பொருளாதாரத் திட்டத்தின் மீது அவர் ஒருமுறையேனும் கண்ணோட்டம் விட்டிருந்தால், இன்று பாரதிய லோகதளத்தில் இணைந்துள்ள சுதந்திரக் கட்சியின் பொருளாதாரக் கொள்கைகளை மேலெழுந்தவாரியாகவாவது அவர் படித்திருந்தால், ஸ்தாபன காங்கிரஸும், பாரதிய லோக தளமும் அவற்றின் மகாநாடுகளில் விவரித்துள்ள திட்டங்கள் மீதாகக் கடைக்கண் பார்வையையாகிலும் பிரதமர் வீசியிருந்தால் இவ்விதம் பேசியிருக்க மாட்டார்.

நமது துரதிர்ஷ்டம் இந்தக் கட்சிகள் பிரிந்து நிற்கின்றன; பிரதமரும் பேசுகிறார்!

பிரதமர் அவர்களது கேத்ரிநகர் பேச்சையாவது தேர்தல் நெருங்குகிறது என்ற பதற்ற உணர்வில் எழுந்ததாகப் 'புரிந்து' கொள்ளலாம்; ஆனால் ஜனநாயக ஆட்சிக்குச் சமாதி எழுப்பிச் சர்வாதிகார ஆட்சிக்குத் தாவிய முஜிபுர் ரஹ்மான் அவர்களுக்குப் பாரத மக்கள் சார்பில் வாழ்த்து அனுப்பி வைத்தாரே, அதைத்தான் புரிந்து கொள்ள முடியவில்லை, எவ்வளவு முயன்றாலும் புரிந்து கொள்ளவே முடியவில்லை!


இந்தியா பாகிஸ்தான் இடையே,
அமைதி நிலவும் போலிருக்கே.
உடனடியாக இதற்கு
ஏதாவது செய்தாகவேண்டும்


மாளவியா
எண்ணெய்
மன்னருக்கு
எண்ணெய்
போடுகிறார்!

# கருணை காட்டுங்கள்!

லெவி நெல்லைக் கண்டிப்பாக அதிகாரிகளிடம் கொடுத்துவிட வேண்டும் என்றும் தராமல் இருப்பது சட்டப்படி குற்றம் என்றும் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் முதல்வர் விவசாயிகளை எச்சரித்திருக்கிறார்.

சட்டம் மக்களின் நலனுக்கு ஏற்பட்டதே ஒழிய மக்களைக் கொடுமைப்படுத்த அல்ல. லெவி முறையை அமுல்படுத்துவது இன்றைய பற்றாக்குறை நிலைமையில் அவசியம் என்ற முடிவுக்குத் தமிழக அரசு வந்திருந்தால் அதில் நாம் குற்றம் கண்டுபிடிக்கவும் போவதில்லை. ஆனால் கருணையுடன் அதிகாரத்தைப் பிரயோகியுங்கள் என்றுதான் கருணாநிதியைக் கேட்டுக் கொள்கிறோம்.

மழையின்மையாலும் காவிரி நீரும் கிடைக்காததாலும் தஞ்சை மாவட்டத்திலே விளைச்சல் வெகுவாகப் பாதிக்கப்பட்டிருக்கிறது. பலருக்கு அறுவடையில் கண்டு முதலானதை விடப் பல மடங்கு அதிகமாக லெவி விதித்திருக்கிறார்கள். அதிகாரிகளின் கெடுபிடிகள் மக்களுக்காக ஆட்சியல்ல, ஆட்சிக்காக மக்கள் என்ற நிலையைத் தோற்றுவித்துள்ளன.

## புட்டோவின் வெற்றி!

அமெரிக்க ஆயுத உதவியை ஏராளமாகப் பெறுவதில் பெருவெற்றி அடைந்துள்ளார் புட்டோ. இந்தியாவுக்குப் புதிதாக வரவிருக்கும் அமெரிக்கத் தூதர் வில்லியம் ஸாக்ஸ்பி தமது இக்கட்டான நிலையை வர்ணிக்கும்போது, ''குடும்பத்தினர் ஒன்று கூடுகையில் கல்யாணமாகாமல் பிறந்த மகனும் வந்து சேர்ந்தாற் போல'' என்று விசனத்துடன் கடுமையாகப் பேசியுள்ளார்.

நமக்குப் பெரிய தலைவலியை ஏற்படுத்தப் போகும் இந்த ஒப்பந்தத்தில் கண் துடைப்புக்காக 'இந்த ஆயுதங்கள் இந்தியாவுக்கு எதிராகப் பயனாகமாட்டா' என்று ஒரு ஷரத்து சேர்க்கப் படலாம். ஆனால் யுத்தம் என்று வரும்போது இந்த ஷரத்து எகிறிப் போய் விடும் என்பது அனுபவத்தில் நாம் அறிந்தது.

புட்டோவின் வாசாலகமான பேச்சு மட்டும் இந்த வெற்றியை அவருக்குத் தேடித் தந்துவிட்டதாகக் கூற முடியாது. நமது அயல் நாட்டுக் கொள்கைகளின் பலவீனமாகவும் கொள்ளலாம். பாகிஸ்தானுக்குப் பெருமளவு ஆயுதங்களை அளிப்பதைத் தடை செய்ய இயலாத அளவில் நாம் அமெரிக்க அரசிடம் செல்வாக்கு இழந்திருக்கிறோம் என்று பொருள். நமது தேவையற்ற அணுகுண்டு சோதனையும் புட்டோவுக்கு உதவியிருக்கிறது.

புட்டோவின் வெற்றி அமெரிக்காவுக்கு எதிராகத் தில்லியில் ஆத்திரத்தைக் கிளப்பி விடாதிருக்க வேண்டும். சிறிது சிறிதாகச் சீர்ப்பட்டு வரும் அமெரிக்க–இந்திய நல்லுறவுகளை இதனால் நாசமடைய விடுவோமேயானால் நஷ்டம் நமக்குத்தான்.

## விவேகத்தின் முடிவு

திரு சி. சுப்பிரமணியத்தின் மிரட்டலுக்குத் தமிழ்நாடு ஸ்தாபன காங்கிரஸ் மசியவில்லை. கெடு வைத்துத் தேதி குறிப்பிட்டு அல்லவா பேசினார் சி. எஸ்.? 'தேர்தல் உடன்பாடு, ஒத்துழைப்பு எல்லாம் வேண்டாம்; இந்திரா காங்கிரஸுடன் இணைந்து விடட்டும், காமராஜின் காங்கிரஸ்' என்றார்.

அ. தி. மு.க.வின் ஆதரவு இந்திரா காங்கிரஸுக்குக் கிடைப்பது நிச்சயமே என்ற நிலை அவரை அப்படிப் பேச வைத்தது.

இந்த உருட்டல் மிரட்டலுக்கெல்லாம் அஞ்சாமல் காமராஜ் காங்கிரஸ் தன்மானத்துக்கு ஏற்றதும் நாட்டு நலனுக்கு உகந்ததுமான முடிவைச் செய்திருக்கிறது. இந்திரா காங்கிரஸ், அ. தி. மு. க.வின் ஆதரவைப் பெறுமேயானால் இரு சாராரையுமே தேர்தல் களத்தில் சந்திக்க வேண்டியதுதான் என்று கூறிவிட்டது தமிழ்நாடு ஸ்தாபன காங்கிரஸ்.

தேர்தலில் வெற்றிபெற வேண்டும் என்ற ஒரே நோக்கத்தில் காமராஜ் அவர்களால் கூடாநட்புக் கொள்ள முடியாது. விவேகத்தின் முடிவுக்கு மக்கள் அமோக ஆதரவு அளிப்பார்கள் என நம்புவோம்.

ராஜாஜி சிந்தனை

### பள்ளிச் சிறுவன் கணக்கு!

மக்கட் தொகையைக் குறைப்பது, குறைவாகச் சாப்பிடுவது, ஐம்பது கோடி மக்களின் உணவுப் பழக்கவழக்கங்களை மாற்றுவது என்ற யோசனைகள் பள்ளிக்கூடச் சிறுவர்களின் கணக்குகள் போன்றவை. ராஜ நீதியையோ அல்லது ஆட்சித் திறனையோ காட்டுபவையல்ல. கலபத்தில் மாற்றிக் கொள்ளக்கூடிய பழக்க வழக்கங்களைக்கூட நம்மால் மாற்றிக் கொள்ள முடியாதபோது உணவுப் பழக்கத்தை எப்படி மாற்ற முடியும்? சிகரெட் பிடிப்பதால் புற்றுநோய் வரும் என்றும் மது அருந்துவது இருதயத்துக்கு நல்லதல்ல என்றும் நன்றாகத் தெரிந்திருந்தும் அறிவாளிகள்கூட அந்தப் பழக்கங்களை விட்டொழிப்பதில்லை. தேசத்தை ஆள ஒரு மந்திரிசபைக்குத் தரப்பட்டிருக்கும் அவகாசத்துக்குள் நாட்டின் ஜனத்தொகையைக் குறைப்பது என்பது நடக்காத காரியம். குறைவாகவும் சாப்பிட்டுக் கொண்டு அதே சமயம் தேசத்தின் பொருளாதார முன்னேற்றத்தைக் கருதி அதிகமாக உடலை வருத்தி உழைக்கவும் வேண்டும் என்பது சாத்தியமில்லை. குறைவாகச் சாப்பிடுமாறு வற்புறுத்துவது நிலைமையைச் சீர்திருத்தும் மார்க்கமல்ல; அது பஞ்ச நிலைமையை ஒப்புக் கொண்டு விழிக்கிற கையாலாகாத்தனம். —சுயராஜ்யா, பிப்ரவரி 12,1966

# நாங்கள் பெரும் பூரிப்படைகின்றோம்!

எமது டிபாசிட்டுகள் ரூ. 277 கோடிக்கு உயர்ந்துள்ளன —
ஒரே ஆண்டில் ரூ. 61 கோடி அதிகரித்துள்ளது

மற்றும்

மூன்று ஆண்டுகளில் இருமடங்கிற்குமேல் அதிகரித்துள்ளது
1971 இறுதியில் ரூ. 125 கோடியாக இருந்தது
1974 இறுதியில் ரூ. 277 கோடியாக உயர்ந்துள்ளது

எமது அட்வான்சுகளும் இருமடங்கிற்குமேல் அதிகரித்துள்ளன
1971 இறுதியில் ரூ. 82 கோடியாக இருந்தது
1974 இறுதியில் ரூ. 195 கோடியாக உயர்ந்துள்ளது

1974ம் ஆண்டில் 71 கிளைகளை நாங்கள் திறந்து
500 கிளைகள் மூலம் சேவை புரிந்தோம்

புள்ளி விவரங்கள் ஒருபுறமிருக்கட்டும்

எமது ஆதரவாளர்கள் எங்கள் மீது
கொண்டுள்ள எல்லையற்ற
நல்லெண்ணம் காரணமாகவே
இத்தகைய பெரும் வளர்ச்சியை
நாங்கள் காண முடிந்தது என்பதில்
பெரும் பூரிப்பும் பெருமையும்
அடைகின்றோம்.

எனவே

இந்த மலர்ச்செண்டை எமது
ஆதரவாளர்களுக்கே சமர்ப்பித்து,
எம்மிடம் பணியாற்றும் 7392
செயல் வீரர்களின் சேவையை
அவர்களுக்கு மீண்டும்
அர்ப்பணித்துக் கொள்கிறோம்.

To, Indian Bank




## இந்தியன் பாங்க்

(இந்திய அரசுக்கு முழுதும் சொந்தமானது)
தலைமை அலுவலகம்:
17 வடக்கு கடற்கரைச் சாலை, சென்னை-600 001

**உங்கள் நலனில் அக்கறை காட்டும் பாங்க்**

# எனக்கு ஏன் கனகாபிஷேகம் — 1

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

[பதினேழு ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் சென்னைக்கு விஜயம் செய்து நீண்ட காலம் தங்கியபோது மாநகர பக்தர்கள், 1958 மார்ச்சில், தியாகராய நகரில் அவர்களுக்குக் கனகாபிஷேகம் செய்தார்கள். இப்பொன் முழுவதையும் ஆசாரியர்கள் சம்ஸ்கிருத வித்யைக்கே வழங்கினார்கள். இவ்வைபவத்தில் பெரியவர்கள் நிகழ்த்திய சம்ஸ்கிருத உரையின் தமிழாக்கத்தை அவசியமான சில விளக்கங்களோடு தொடர்ந்து இங்கே அளிக்கிறோம்.]

**ச்ருதி ஸ்ம்ருதி புராணானாம் ஆலயம் கருணாலயம் ।**

**நமாமி பகவத்பாத சங்கரம் லோக சங்கரம் ।।**

(வேத உபநிஷதங்கள், தர்ம சாஸ்திரங்கள், புராணங்கள் இவை யாவும் குடிகொண்ட ஆலயமாக, இவற்றின் பயனை அனைவருக்கும் அளிக்க வேண்டும் என்ற கருணையும் குடிகொண்ட ஆலயமாக இருக்கிற ஸ்ரீ பகவத்பாத சங்கரரை லோகத்துக்கெல்லாம் நலனை புரிகிற லோக சங்கரரை * நமஸ்கரிக்கிறேன்.)

தினந்தோறும் பக்தர்கள் வந்து எனக்குத் தேங்காய் பழம் காணிக்கை செலுத்துகின்றனர். ஏராளமான புஷ்ப மாலைகளை, துளசி வில்வ ஹாரங்களைக் கொண்டு வந்து சமர்ப்பணம் பண்ணுகிறார்கள். பண்டிதர்கள் வந்து புகழ்மொழிகளைக் கோர்த்து மாலையாகப் போடுகிறார்கள். கவிகள் வந்து பாமாலை சூட்டுகிறார்கள். அன்பினாலே செய்கிற இந்த உபசாரம் ஒவ்வொன்றுமே எனக்குக் கனகாபிஷேகம் மாதிரிதான் இருக்கிறது. இதெல்லாம் போதாதென்று இன்று வாஸ்தவமாகவே பொற்காசுகளை என்மேல் வர்ஷித்து அசல் கனகாபிஷேகம் செய்திருக்கிறீர்கள்.

இப்படி எனக்குத் தேங்காய், பழம், புஷ்பமாலை, கவிதை, ஸ்வர்ண வர்ஷம் என்று எல்லாவற்றையும் கொண்டு வந்து கொட்டுவதற்குக் காரணம் என்ன? இவற்றைப் பெற எனக்கு என்ன யோக்யதை என்று யோசித்தால் ஒரே ஒரு காரணம் தான் தெரிகிறது. 'சங்கரர்' என்ற பெயரை நான் வைத்துக் கொண்டிருக்கும்படியாக ஏற்பட்டிருக்கிறதோ, இல்லையோ? அது ஒன்றே காரணம். சாக்ஷாத் ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாளின் புண்ணிய நாமா வந்து ஒட்டிக் கொள்கிற பாக்யவசம் எனக்கு லபித்திருக்கிறது என்ற ஒப்புக்காகவே இத்தனை மரியாதைகளும் கிடைக்கின்றன.

அவர் எப்படிப்பட்டவர்? சுருதிகள் எல்லாம், ஸ்மிருதிகள் எல்லாம், புராணங்கள் எல்லாம் அவருக்குள்ளே அடக்கம்; சகல ஜீவராசிகளிடமும் பாய்கிற கருணை முழுதும் அவருக்குள் அடக்கம். அப்படிப்பட்டவரின் நாம தாரண மாத்திரத்துக்காகவே எனக்கு இத்தனை நடக்கிறது: கனகாபிஷேகமே நடக்கிறது. வெறும் பெயரளவில் இத்தனை பெருமை என்றால், எப்படி வாழ வேண்டும் என்று அவர் ஆக்ஞையிட்டிருக்கிறாரோ அப்படியே வாஸ்தவத்தில் நடந்தும் காட்டி விட்டால் சாசுவத கனகாபிஷேகமாக, நித்தியப் பொன்மாரியாக இருக்கும். அவர் பெயரை வைத்துக் கொள்கிற பாக்கியம் யாரோ சிலருக்குத் தான் கிடைக்கும். ஆனால் ஒவ்வொரு மனுஷ்யனும் எப்படியெப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று அவர் ஆக்ஞை செய்திருப்பதால், அவர் சொற்படி வாழ்ந்து காட்டுகிற பெரிய பாக்கியம் அத்தனை ஜனங்களுக்கும் பொதுவாகும். அதாவது, யாரோ ஒருத்தருக்கு என்றைக்கோ ஒருநாள் கனகாபிஷேகம் என்றில்லாமல் லோகத்தில் அத்தனை பேருக்கும் அன்றன்றும் பொன்மாரியாக, நித்ய கனகாபிஷேகமாக, ஆனந்த உத்சவமாக இருக்கும் — நாம் ஒவ்வொருவரும் அவர் வகுத்துத் தந்த நெறிப்படி வாழ்க்கை நடத்தினால்.

சமஸ்த பிரபஞ்சத்துக்குமான இந்த நித்திய கனகாபிஷேகத்தில் இன்னொரு விசேஷமும் உண்டு. தர்ம, அர்த்த, காம, மோக்ஷம் — அறம், பொருள், இன்பம், வீடு — என்று மனுஷ்ய வாழ்க்கைப் பயன்களாக நாலு இருக்கின்றன. இவற்றைப் புருஷார்த்தங்கள் என்பார்கள். அவற்றில் இப்போது பண்ணுகிற கனகாபிஷேகம் வெறும்பொருளால் (அர்த்தத்தால்) மட்டும் செய்யப்படுவதாக இருக்கிறது. ஆசாரியாளின் ஆக்ஞையை அநுசரித்தாலோ அவசியமான பொருள் மழை கிடைப்பது மட்டுமல்ல ('கனகதாரா ஸ்துதி' பாடி அவரே பொருள்மழை பொழிந்திருக்கிறார்): இதோடு இதைவிடச் சிறப்பாக, நம் மீது தர்ம மழை, இன்ப மழை, மோக்ஷ மழை எல்லாமே பெய்து விடும். மனுஷ்ய அபிலாஷைகளிலும், பிரயத்தனங்களிலும் நல்லவையாக இருக்கப்பட்ட அத்தனையும் பொன் மாரியாக நமக்குப் பொழியும். — லோகம் முழுக்கப் பொழியும். ஸ்ரீ பகவத்பாதர்களின் ஆக்ஞையை நடத்திக் காட்டுவதால் உலோகத்தில் இருக்கிற பொன் மட்டுமின்றி, சதுர்வித புருஷார்த்தங்களும் சமஸ்த லோகத்திலும் பிரகாசமாக வீசிப் பொன்னைப் பொழிந்தபடி இருக்கும்.

(தொடரும்)

(* சங்கர: — சம் — கர:; சம் — நலனை, கர: — செய்பவர்.)

கனமான இரும்புக் கிராதியைத் திறந்து கொண்டு அவன் உள்ளே அடியெடுத்து வைத்தான். அவன் அம்மா சொன்னபடி ஞாபகமாக வலதுகாலை முதலில் எடுத்துவைத்தான்.

'பஸ்ஸரின்' ஒலி கேட்டுப் பூதாகாரமான சரீரத்துடன் ஒரு பெண்மணி வெளிப்பட்டாள். அவளுடைய உடையிலிருந்தும், பாவனைகளிலிருந்தும், அதிகார தோரணையை வெளிப்படுத்தும் மூக்குக் கண்ணாடியிலிருந்தும் அவள்தான் அந்த இல்லத்தரசி என்பது ஊகத்துக்கு அவசியமின்றித் தெரிந்தது.

''யாருப்பா நீ? எங்கே வந்தே?''

''சிவபாலசுப்பிரமணியனைப் பார்க்க வேண்டும்.''

''அவர் அப்பாயின்ட்மெண்ட் வைத்துக் கொள்ளாமல் யாரையும் பார்ப்பதில்லையே!''

''நான் வருவதைப் பற்றி என்னை அனுப்பியவர் ஃபோன் பண்ணியிருப்பார்''

அவன் தயங்கினான்.

# அவன் செய்த சிபாரிசு!



அதற்குள் உள்ளிருந்து, ''யார் அங்கே?'' என்று கேட்டபடியே, அவர் — [illegible] வந்துவிட்டார்.

''வணக்கம்!'' என்றான் அவன்.

''உட்கார்!'' என்றார் அவர்.

அவர் உபசாரத்தில் அதிகார தோரணை பரவியிருந்தாலும், அவர் உட்காரச் சொன்னதே அவனுக்குப் பெரும் ஆறுதலாக இருந்தது.

அவர் ஏதாவது கேட்பார் என்று அவன் காத்திருந்தான். ஆனால் அவர் தாம் ஏதோ ஈயோ, வண்டோ உட்கார்ந்திருப்பது போன்ற உதாசீனத்துடன் அன்றைய தினசரியின் பக்கங்களை மிகுந்த அலட்சியத்துடன் புரட்டி மேய்ந்தார்.

சில நிமிடங்களுக்குப் பிறகு பத்திரிகையை டீப்பாய் மீது எறிந்து விட்டு, ''நியூஸ் பார்த்தாயா? வேலை கிடைக்காதவர்கள் ஒரு மகாநாடு நடத்துகிறார்களாம். அதற்குத் தலைமை தாங்கப் போவது ஒரு மந்திரி. அவரும் வேறு வேலையில்லாதவர். அதனால் இதுமுழுக்கமுழுக்க ஒரு வேலையில்லாதவர்கள் மகாநாடாகவே அமைந்துவிட்டது! எப்படி?''

அவன் இலேசாகப் புன்னகை புரிந்தான்.

''மிஸ்டர் கணபதி உங்களுக்கு ஃபோன் செய்திருப்பார் என்று நினைக்கிறேன்'' என்று தயக்கத்துடன் ஆரம்பித்தான்.

''...போனா? எதுவும் வரவில்லையே! நீ எந்தக் கணபதியைச் சொல்கிறாய்?'' என்று அவர் நெற்றியைச் சுருக்கிக் கொண்டு கேட்டார்.

அவன் விவரம் சொன்னான்.

''ஓ! அவனா? வடிகட்டின முட்டாளாயிற்றே அவன்!'' தமது அபிப்பிராயத்தைப் பகிரங்கமாக அறிவித்தார்.



அவரது விமர்சனம் செல்லமானதா, இல்லை, இகழ்ச்சியானதா என்பது அவனுக்குப் புரியவில்லை. அதைப் பொறுத்துத்தான் அவரது சிபாரிசின் வலுவும் அமைந்திருக்கிறது என்று உணர்ந்ததால் அவன் இலேசாகக் கவலை கொள்ளத் தொடங்கினான்.

அவரது கவாதீனத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவன் சற்றுத் தைரியத்துடன், ''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? அவர் ரொம்ப நல்ல மாதிரியாயிற்றே?'' என்றான்.

அவர் ஹோஹோவென்று சிரித்தார். ''உனக்குச் சிபாரிசு பண்ணியிருப்பதால் அவன் நல்லவன் இல்லே? மை டியர் யங் மேன், நல்லவனாக இருப்பது வேறு, முட்டாளாக இல்லாமல் இருப்பது வேறு. அண்ட்



ஃபார் தட் மேட்டர், கணபதி முட்டாள் என்பதில் வேண்டுமானால் அபிப்பிராய பேதம் இருக்கலாமே தவிர, அவன் ஒரு வடிகட்டின ராஸ்கல் என்பதைப் பற்றி இரண்டு வித அபிப்பிராயங்கள் என்றுமே இருந்தது இல்லே!''

அவன் முகம் களைத்து இழந்து வருவதை ஒருவித ரசனையுடன் அவர் கவனித்தார்.

''சரி, விஷயத்துக்கு வருவோம். நீ வந்த விஷயத்தைக் கடகடவென்று சொல், பார்க்கலாம்'' என்றார்.

அவன் பெரிதும் ஆறுதலுடன் சொன்னான்: ''மாருதி அண்ட் கோவில் ஒரு கிளார்க் வேலை காலியிருக்கிறதாம். நீங்கள் சொன்னால் அது நிச்சயம் கிடைக்கும் என்று மிஸ்டர் கணபதி சொன்னார்.''

''மாருதியா? அதில் எனக்கு யாரையும் தெரியாதே! சஞ்சய் காந்தியைப் பிடிக்க வேண்டும். யாராவது எம். பி.யைப் பார்த்தால்தான்....''

''எக்ஸ்க்யூஸ் மீ ஸார். நான் சொல்வது அந்த மாருதி இல்லை. இங்கே மெட்ராஸில் இருக்கும் ஒரு சிறிய கம்பெனி அது. மிஸ்டர் நாதன்தான் அதன் ஸோல் ப்ரொப்ரைட்டர்.''

''ஓ! யூ மீன் தட் ரெட்ச்சட் ஒன். நீ ஒருவன்தான் அதைக் கம்பெனி என்று சொல்கிறாய். அது ஹோப்லெஸ்லி ராட்டன் ஃபர்ம் ஆயிற்றே. என்னைக் கேட்டால் அங்கே வேலை பார்ப்பதை விடப் பிச்சைக்காரர் தலைவிடுதி எதிலாவது போய் இருக்கலாம் என்பேன்....''

அவரது மனோபாவம் அவனுக்குச் சரியாக விளங்கவில்லை. அவர் தமாஷ் பேர்வழியா, அல்லது நாசூக்காகத் தட்டிக் கழிக்கிறாரா?

''ஸார்! நான் எஸ்.எஸ்.எல்.ஸி. பாஸ் செய்திருக்கிறேன். ஏதாவது, ஒரு வேலை

# விஜயசாரதி

## பொட்டுக்கறை:22



அவசியம் இப்போது எனக்கு வேண்டும். வீட்டில் ரொம்பக் கஷ்டம் ஸார். அக்காவுக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை. அப்பா பி.டபிள்யூ.டி.யில் கிளார்க். அடுத்த மாதம் ரிடையர் ஆகிறார். அப்புறம் நான்தான் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டும்...''

''தஸ்... தஸ்... வெரி பேட். இந்த ரிடையர்மெண்ட் வயதையெல்லாம் உயர்த்த வேண்டும். பிஃப்டி ஃபைவ் இஸ் ரிடிகுலஸ்லி லோ. விலைவாசி உயர்ந்தால் பஞ்சப்படியை உயர்த்துகிறார்கள். ஆனால் சராசரி இந்தியனின் ஆயுள் உயர்ந்திருக்கும் போது, ரிடையர்மெண்ட் வயதை உயர்த்த வேண்டாமா?... நான் கூட இன்னும் இரண்டு வருடங்களில் ரிடையர் ஆகிறேன். ஆனால் இப்போதும் நான் எவ்வளவு சுறுசுறுப்பாகவும், இளமையாகவும், ஆரோக்கியமாகவும் இருக்கிறேன் பார்த்தாயா? நான் எதற்கு ரிடையர் ஆக

வேண்டும்? பை தி வே, நீங்கள் — மாணவர்களைச் சொல்கிறேன் — எதற்கெல்லாமோ போராட்டம் நடத்துகிறீர்களே, இந்த ரிடையர்மெண்ட் வயதை உயர்த்தச் சொல்லி ஏன் போராட்டம் நடத்தக் கூடாது?...''

அவனுக்கு நம்பிக்கை கொஞ்சம் கொஞ்சமாகப் போய்க் கொண்டிருந்தது. ''சார்! நான் மாணவன் இல்லையே!... வேலை தேடி அலையும் இளைஞன்.''

''ஓ! நான் மறந்துட்டேன்'' என்றார் அவர் வருந்தும் குரலில். ''ஆல்ரைட் நீ என்ன பர்ம் என்று சொன்னாய்? மாருதி அண்ட் கோ. கே. ஆர். நாதன்தானே? ரைட்டோ!'' என்றார்.

இன்னமும் அவரிடம் நிறையப் பேசி, தனது நிலைமையை விளக்கி அவரிடம் அனுதாபத்தை வரவழைத்துக் காரியத்தைச் சாதித்துக் கொள்ள வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. ஆனால் என்ன பேசுவது என்று புரியவில்லை. அவர் 'ரைட்' வேறு கொடுத்து விட்டார்.

''நான் வரட்டுமா சார்?''

அவன் எழுந்தான். அவர் கவனிக்கவில்லை. ஏதோ யோசித்துக் கொண்டிருந்தார்.

''சார்!''

''ம்...ஓ! நீயா? இன்னும் போகவில்லே? நான் ரைட்டோ சொல்லி அரை மணி ஆகிவிட்டது.''

திடீரென்று அவர் சீறியது ஏன் என்பது அவனுக்குப் புரியவில்லை.

''அவரிடம் சொல்கிறீர்களா சார்?'' என்று அவன் மீண்டும் ஞாபகப்படுத்தினான்.

''நான் முன்பே சொல்லியாகி விட்டது.''

''சார்...?''

''உன் கேள்விக்கு முன்பே பதில் சொல்லியாகி விட்டது.''

தைரியத்தை வரவழைத்துக் கொண்டு அவன் கடைசியாகக் கேட்டான். ''இந்த வேலை கிடைக்குமா சார்?''

அவர் அவனைப் பார்த்தார். திடீரென்று அவர் கண்களில் பரிதாபம் சுரந்தது போல் தெரிந்தது. சட்டென்று எழுந்து பரிவுடன் அவன் தோளில் தட்டினார். ''டோண்ட் ஒர்ரி! காட் இஸ் கிரேட்! தினமும் தபால்காரரைப் பார். நல்ல சேதி சண்டிப்பாக வரும்'' என்றார் ஆறுதலான குரலில்.

அவன் மனத்திலிருந்த ஏமாற்றம் அனைத்தும் திடீரென்று வெளியேறி அதில் உற்சாகம் புகுந்து கொண்டது — கையில் அவர் அப்பாயின்ட்மெண்ட் ஆர்டரே கொடுத்து விட்டது போல். பின்னே அவர் சொன்னதற்கு வேறே என்ன அர்த்தம்?

''வருகிறேன் சார்! தாங்க் யூ வெரி மச் சார்'' என்று திரும்பத் திரும்ப அவரை வணங்கிக்கொண்டே அவன் வெளியேறினான்.

அவன் கேட்டைத் திறந்த போது, ''காப்பி சாப்பிடுகிறாயா?'' என்று அவர் விசாரித்தார். அவன் பணிவுடன், மறுத்து விட்டு அவரது பெருந்தன்மையை வியந்த படியே நடந்தான்.

அவன் வெளியேறியதும், அவர் உள்ளே திரும்பி டெலிபோனிடம் வந்தார்.

''ஹலோ!''

''ஹலோ! மாருதியா?''

''ஆமாம் சார். நீங்கள் யார்?''

''நாதன் இருக்கிறானா?''

''பேசுவது யாரென்று....''

''அந்த முட்டாளைக் கூப்பிடு'' என்று அவர் பொறுமையின்றிக் கத்தினார்.

''ஹலோ நாதன் ஹியர்'' என்று ஐந்து விநாடிகளுக்குப் பின் எரிச்சலுடன் பதில் வந்தது.

''ஏண்டா முட்டாள்! மேஜை மேலிருக்கும் டெலிபோனைத் துரை எடுத்துப் பேச மாட்டாரோ? அதற்கென்று ஒரு ஆளா?''

''யார் சார் பேசு ... ஓ! நீங்களா? குட்மார்னிங் சார். சௌக்கியமா?''

''உன் பிஸினஸ் ஒழுங்காக நடக்கும் வரையில் யார் சௌக்கியமாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் உனக்கென்ன?''

''அது சரி. என்ன விஷயம் சார்? அபூர்வமாக ஃபோன் செய்கிறீர்களே!''

''உன் கம்பெனியில் ஒரு 'வேகன்ஸி' இருக்கிறதாமே, ஏன் என்னிடம் சொல்லவில்லே?''

'ஏன் அவரிடம் சொல்ல வேண்டும்?' என்று நாதன் யோசிப்பதுபோல் ஓர் அரை நிமிடம் மௌனம் நிலவியது. ''அதற்கென்ன சார் இப்போது? உங்களுக்குத் தெரிந்தவர்கள் யாராவது ...''

''எவ்வளவு சம்பளம் கொடுப்பாய்?''

''அதெல்லாம் வழக்கம்போல்தான் சார். நூறு ரூபாய் ஸ்டார்ட்டிங். ஆள் யாராவது இருக்கிறார்களா?''

''உன் பிசுனாறித்தனத்தைக் கொஞ்சம் உதறிவிட்டு நூற்றைம்பது ரூபாய் தருவாயா?''

''பையன் யார் சார்?''

''நம் பையன்தான்.''

''உங்கள் பையனா? அவன் ஏதோ பி.காம். இல்லே? இந்த வேலைக்கு எஸ். எஸ். எல். ஸி. போதுமே!''

''ஏன் பி.காம். என்றால் கசக்கிறதோ? என் பையன் பி.காம். தான். இன்னும் பாஸ் செய்யவில்லே. இன்னும்இரண்டு அட்டெம்ப்ட் ஆவது ஆகும். அதுவரையில் சும்மா இருப்பானேன் என்றுதான். நாளை அனுப்பட்டுமா?''

''நாளைக்கா...?''

''என்னடா தயக்கம்? என் பேச்சுக்கு அவ்வளவுதான் மதிப்பா? ... நாளைக் காலை பத்து மணிக்கு வருவான் அங்கே. ஓ. கே.... சரி வைத்து விடு.''

''யாரோடு பேசினீர்கள்?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் அவரது மனைவி.

''உன் உதவாக்கரைப் பிள்ளைக்கு வேலை கேட்டுத்தான் பேசினேன்'' என்றார் அவர் சலிப்புடன்.

''கிடைத்து விட்டதா? யார் பொரிசு?''

அவர் ஒரு கணம் யோசித்து விட்டு, ''பொரிசா? சற்று முன் இங்கே ஒரு பையன் வந்தானே அவன் பொரிசுதான்!'' என்று சொல்லிச் சிரித்தார்!

அவள் மென்மையானவள்...
அவள் ஒரு புதிர்...
அவள் மிருதுவானவள்,
உறுதியானவள்...
தீப்போன்றவள் அவள்
பெண்மையே உருவானவள்

பட்டுப்போன்ற டால்க்... அன்னைப் போல மிருதுவானது. உங்கள் மேனியைத் தழுவி அரவணைப்பது. உங்களை மோகன வாகினியில் ஆழ்த்தும் அருமையான புது நறுமணம் கொண்டது. ஹேலோவிற்கென்றே பிரத்யேகமாக உருவான அதன் நறுமணம் நீண்ட நேரம் உங்களைத் தழுவி உங்களைச் சுற்றி கமகமவென வீசிக் கொண்டிருக்கும். அதுவே உங்கள் வெய்ல ஆஃப் லவ். ஹேலோ மட்டுமே அளிப்பது.

# ஹேலோ

வெய்ல் ஆஃப் லவ்
டால்க்




## தனிச் சலுகை

எகானமி சைஸ் டப்பா
ஒவ்வொன்றுக்கும்
**ரூ.1.50**
விலையில் தள்ளுபடி

புள்ளியிட்ட கோட்டினூடே வெட்டவும்.

பக்கத்திலுள்ள கூப்பனை வெட்டி எடுங்கள் அதில் உங்கள் பெயரையும், முகவரியையும் ஆங்கிலத்தில் பூர்த்தி செய்து, கூப்பனில் உள்ள முகவரிக்கு போஸ்ட் செய்யுங்கள். (தபாலில் அனுப்புங்கள்) உங்களுக்கு ஒரு விசேஷ தள்ளுபடிச் சீட்டு அனுப்பப்படும். அந்தச் சீட்டை உங்கள் டீலரிடம் கொடுங்கள். அவர் பட்டியல் விலையைவிட ரூ. 1.50 குறைந்த விலையில் ஹேலோ வெய்ல் ஆஃப் லவ் டால்க் எகானமி சைஸ் டப்பா ஒன்று கொடுப்பார். இந்த விசேஷ சலுகை குறுகிய காலத்திற்கு மட்டுமே உண்டு. எனவே முந்துங்கள். இன்றே கூப்பனை தபாலில் சேருங்கள்.

COUPON

K

To
Halo Veil of Love Talc D. O.
C/o Colgate-Palmolive (India) Pvt. Ltd.
12-A Rirchie Street, Madras 600 002.

Dear Sirs,
I would like to have my Halo Veil of Love Talc discount voucher sent to :

Name ____________________

Address ____________________

____________________



HT.G.2 TM

# பாதுகாப்பிற்கு ஒரு பூட்டு உள்ளதெனில் அது நவ-தால் ஒன்றே ஒன்றுதான்!




நம்பிக்கையானது. அதனால்தான் பாங்குகளும் தொழிற்சாலைகளும், கிடங்குகளும் நவ-தால் பூட்டையே உபயோகிக்கின்றனர். அதிநுட்ப-மான தயாரிப்பு! ஒவ்வொரு பூட்டுக்கும் மாறுபட்ட இணைப்பு முறையில் வெட்டப்பட்ட சாவிகள். உடைத்து திறக்க இயலாதபடி அதிக பாதுகாப்பு அளிப்பதற்-கேற்ற முறையில் செய்யப்பட்டது நவ-தால். பித்தளை, எஃகினலான இரட்டைக் கூடு அதை மிகமிக உறுதியாக்குகிறது. தயாரிப்-பவர்கள்: கோத்ரெஜ்—பாதுகாப்பு உபகரணங்களைத் தயாரிப்பதில் 70 ஆண்டுகளுக்கும் மேலான அனுபவமுடையவர்கள்.

4 சைஸ்கள்:
40 mm (5 லீவர்கள்)
50 mm (6 லீவர்கள்)
65 mm (7 லீவர்கள்)
85 mm (8 லீவர்கள்)

# நவ-தால்

Godrej
கோத்ரெஜ்

எப்போதும் நங்கூரம் மார்க் பூட்டுகளையே கேட்டு வாங்குங்கள்

ULKA-GBNT-4 TAM

# ஆனந்தம், பேரானந்தம், சதானந்தம்!



தியாகராஜர் ஆராதனை விழாக் கச்சேரிகள் சிலவற்றை டேப்பில் பதிவு செய்து கொள்ளவும் திரைப்படம் எடுக்கவுமே அமெரிக்காவிலிருந்து வந்திருந்த திரு ஜேம்ஸ் ரூபின் சுறு சுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தார்; ஸ்ரீமதி எம். எஸ். அவர்களைப் பற்றிய திரைப்படம் ஒன்றை உருவாக்கி வரும் மத்திய அரசின் திரைப்பட இலாக்காவின் காமிராக்கள் இரண்டு இங்குமங்குமாக இடம் மாறிச் 'சுட்டுத் தள்ளி'க் கொண்டிருந்தன; ஒளி வெள்ளத்தில் பந்தலின் உட்புறம் ஆழ்ந்திருந்தது : தியாகராஜ ஆராதனையை நடத்தும் சமாஜத்தின் முக்கியஸ்தர்களுள் ஒருவரான திரு பாலமுரளி கிருஷ்ணா தமக்கு இயற்கையான மாறாத புன்னகையுடன் வளைய வந்து கொண்டிருந்தார்; மற்றொரு நிர்வாகி வீணை திரு பாலசந்தர் நிகழ்ச்சிகள் எல்லாம் திட்டமிட்டபடி, சிறிதளவும் மாறுதலின்றி நடக்க வேண்டும் என்பதில் கண்ணும் கருத்துமாய் இருந்தார். இளம் வித்துவான்களும் வயதில் முதிர்ந்தவர்களும், முன்னணிப் பாடகர்களும் அந்நிலையை அடைய முனைபவர்களும், மடியாக உடுத்தியவர்களும் மஸ்லின் ஜிப்பா அணிந்தவர்களுமாகப் பாடகர்கள், சங்கீத போஷகர்கள் ஆகியோர் தியாகராஜர் சந்நிதிக்கு முன்னால் இரண்டு வரிசைகளில் அமர்ந்திருந்தனர்; அவர்களுக்குப் பின்னால் ரசிகர்கள் கூட்டம் மொய்த்தது; பஞ்சரத்ன கீர்த்தனைகளை வித்வான்கள் ஒன்று சேர ஒரே மாதிரி பாட வேண்டுமே என்ற கவலையில் பல கரங்கள் தலைக்கு மேலே உயர்ந்து தாளத்தை வீசிப் போட்டன; — இப்படியாகத்தானே ஆராதனை ஏக அமர்க்களமாக ஆரம்பமாயிற்று. எல்லோரும் ஒருமுகமாகச் சேர்ந்து பாடும்போது மிக உயர்ந்த சங்கீதத்தைக் கேட்கிற ஆனந்தானுபவம் நமக்கு ஏற்பட்டு விடவில்லை என்றாலும் ஏற்றத் தாழ்வுகள் ஏதுமின்றி அனைவரும் தியாகராஜர் சந்நிதி முன்னால் அமர்ந்து பாடும் போது பக்தி பாவம் மனத்தில் நிரம்பக் கண்களிலும் நீர் ததும்பி விடுகிறது. இதற்கு அனுசரணையாகவே தொடக்கத்தில் திரு ரமணியின் வேணுகானமும் கடைசியில் ராமநாம சங்கீர்த்தனமும் அமைந்தன. அன்று மாலை ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் கச்சேரியில் நிலவப் போகும் பக்திபரவசமான சூழலுக்குக் காலையிலேயே கட்டியம் கூறியாகி விட்டது எனலாம்.

'நிதி சால ஸுகமா, ராமு நீ ஸந்நிதி ஸேவ ஸுகமா' என்று ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் அன்று மாலை கல்யாணி கீர்த்தனையைப் பாடியபோது, 'அந்தச் சுகமெல்லாம் இருக்கட்டும், இப்போதைக்குச் சம்மணம் போட்டு அமர இன்னும் ஓர் அரை அடி பூமி கிடைத்தால் அதுவே பரம சுகம் என்று எண்ணக் கூடிய அளவில் அத்தனை நெருக்கடி. கூட்டமாவது கூட்டம்! இன்னும் நாலு பேர் பந்தல் வாசலுக்குள் நுழைந்திருந்தால் மறுபுறம் நாற்பது பேர் காவிரி மணலில் (தண்ணீர்தான் கிடையாதே) விழ வேண்டியது தான் என்று சொல்லும்படி அப்படி ஒரு கூட்டம். தலையை ஆட்டி அனுபவித்தால் பக்கத்திலுள்ள மனிதர் தலையில் தேங்காய் உடையும் !

அத்தனை சிரமமும் கச்சேரி முடிந்த பிறகு தான் தெரிந்ததே ஒழிய, ஸ்ரீமதி எம். எஸ். பாடிக் கொண்டிருக்கையில் கால் மரத்துப் போனதுதான் தெரிந்ததா, முதுகில் ஒரு தசைநார் பிசகிக் கொண்டதுதான் புரிந்ததா? 'க்ஷீர சாகரத்தில் சயனித்துக் கொண்டிருப்பவனே!' என்று பகவானைப் பாடி அழைத்துத் துதிக்கிறார் தியாகராஜர். இந்தத்



# இதைக் கண்டால் அதைக் காணோம்!




தேவகாந்தாரி ராகப் பாடலை ஸ்ரீமதி எம். எஸ். அன்று பாடினார். அப்போதும் சரி, அதற்கு முன்னும் பின்னும் சரி நாம் சுமார் இரண்டு மணி நேரத்துக்கு நாதக் கடலில் மிதந்து கொண்டிருந்தோம். ஏன், பகவானேகூடப் பாற்கடலைத் தாற்காலிகமாகத் துறந்துவிட்டு நம்முடன் சேர்ந்து நாதக்கடலில் மிதக்க அங்கு வந்துவிட்டதாகவேதான் தோன்றியது. அப்படி ஓர் இறை உணர்வும் சாந்நித்தியமும் பந்தலில் பரவி நின்றன. காபி ராக ஆலாபனையின் போதோ அந்த நாதக் கடலின் ஆழத்தையும் வீச்சையும் முழுமையாக அளந்து பார்த்து விட்ட ஒரு மன நிறைவையும் மெய்சிலிர்ப்பையும் அடைந்தோம்.

சிட்டு என்று அன்பர்களால் அழைக்கப்படும் டி. கே. மூர்த்தி சிட்டையாகத்தான் தனி வாசித்தார். ஐந்து நிமிஷங்களுக்கும் குறைவென்றாலும் பதினைந்துக்கும் அதிகமான நிமிஷங்களில் வாசிக்கக் கூடிய லய விந்நியாசங்களை அதில் அடக்கிக் காண்பித்தார். விண்வெளி ஆராய்ச்சியாளருக்குத் தெரியும் வாமன உருவத்துக்குள் ஆற்றலை அடக்குவதன் முக்கியத்துவம். ஏன் சிட்டு அவர்களே வாமன உருவினர்தாமே! அழகர்சாமியின் வயலின் அனுசரணை என்றால் ஸ்ரீமதி ராதா விசுவநாதனின் பாட்டு தாயாருக்குப் பக்க பலம்.

அசாவேரியில் தொடங்கி மத்தியமாவதியில் முடிந்த அந்தக் கச்சேரியில் எந்த விருடி தான் மனத்தில் நிற்காமல் போயிற்று? 'அநாத ரக்ஷகி ஸ்ரீ காமாக்ஷி' என்ற வரியின் நிரவலின் போது காஞ்சி காமாட்சி சந்நிதியில் மட்டுமா நின்றோம்? அருகே பெரியவாளையும் மனக் கண்ணால் தரிசித்தோம்! திருவையாற்றுக்கு அவர் விஜயம் செய்த தினமும் நினைவு வந்து உள்ளம் நெகிழ்ந்தோம்.

அந்த விஜயத்தின் நினைவாக இன்னமும் தியாகராஜர் சமாதியில் ஒரு பக்கத்துச் சுவரில் கல்வெட்டு ஒன்று பதிக்கப்பட்டிருக்கிறது. அது கூறுகிறது: 'ராம அவதாரம் நிகழ்வதற்கு முன்பாகவே ராமா என்ற சப்தம் உலகில் தோன்றி விட்டது. அந்த நாதமானது பின்னால் பகவான் அவதரித்தபோது அவருடன் ஐக்கியமடைந்தது. அந்த ராம நாமத்தை முதலில் பூஜிக்கிறார் தியாகராஜர். பின்னர் ராமனது ரூபத்தை வணங்குகிறார். இதுவே எல்லாக் கச்சேரிகளிலும் பாடப்படும் மங்கள கீதம்.'

மற்றொன்றையும் கூறுகிறது அந்தக் கல்வெட்டு. எல்லாக் கல்யாணங்களிலும் முகூர்த்தம் முடிந்ததும் 'ஆனந்தம் ஆனந்தம்' என்று நாயனம் வாசிக்கிறார்கள் அல்லவா? தியாகராஜரது அந்தப் பாடலின் தாத்பர்யத்தை விளக்குகிறது. 'உன் திருநாமமே வாழ்வுக்கு ஆதாரம்; இதுவே பேரானந்தம், பிரும்மானந்தம், நித்யானந்தம், சதாநந்தம்!'

எல்லாக் கச்சேரிகளிலும் எல்லாத் திருமணங்களிலும் கேட்டுக் கேட்டுப் பழகிய இவ்விரு பாடல்களின் உட்பொருளைக் கல்லில் எழுதச் செய்து பதிப்பித்த பெரியவாளின் யோசனையை எண்ணி வியந்தோம்; கருணையை எண்ணி நெகிழ்ந்தோம்.

இரவு தஞ்சை திரும்பும்போது காஸெட் டேப் ரிகார்டரில் கச்சேரியை மீண்டும்கேட்டு, தியாகராஜர் குறிப்பிட்ட பேரானந்தத்தையும் பிரும்மானந்தத்தையும் அனுபவித்தோம். தஞ்சை திரும்பியபிறகு ரேடியோ ஒலிபரப்பில் மூன்றாவது முறையாகக் கச்சேரியைக் கேட்ட போது, நித்யானந்தம் சதாநந்தம் என்றால் என்ன என்று புரிந்துகொண்டோம்!

—குட்டிகிருஷ்ணன்

## நாற்பத்துநாலாம் அத்தியாயம்

# நள்ளிரவுப் பிரயாணம்

**ம**ணிமங்கலம் போர் நடந்து ஏறக் குறைய ஒரு மாத காலம் மகேந்திர பல்லவர் உணர்வற்ற நிலையில் படுத்த படுக்கையாய்க் கிடந்தார். போர்க்களத்தில் அவர் மீது பாய்ந்து காயப்படுத்திய கத்தி விஷந் தோய்ந்த கத்தி என்று தெரிய வந்தது. அரண்மனை வைத்தியர்கள் சக்கரவர்த்தியைக் குணப்படுத்த எவ்வளவோ பிரயத்தனப்பட்டும் தக்க பலன் கிடைக்கவில்லை.

இந்த நிலையில் திருவெண்காடு நமசிவாய வைத்தியர் வந்து சேர்ந்தார். தளபதி பரஞ்சோதி திருவெண்காட்டுக்கு ஆள் அனுப்பி அவரை வரவழைத்தார். நமசிவாய வைத்தியருடைய சிகிச்சை விரைவில் பலன் தந்தது. மகேந்திரருடைய அறிவும் தெளிவு பெற்றது.

அறிவு தெளிந்ததும் மகேந்திர பல்லவர் முதன் முதலாக ஆயனர்–சிவகாமியைப் பற்றி விசாரித்தார். ஆயனர் கால் ஒடிந்து கிடக்கிறார் என்றும், சிவகாமியைச் சளுக்கர்கள் சிறைப் பிடித்துச் சென்றார்கள் என்றும்



தெரிந்ததும் அவர் அடைந்த மனக் கலக்கத்துக்கு அளவே இல்லை. அதனால் குணமான உடம்பு மறுபடியும் சீர் கெட்டுவிடுமோ என்று பயப்படும்படி இருந்தது.

மாமல்லர் தந்தையைப் பார்க்கச் சென்றபோது, அவரை முன்னொரு நாள் ஆயனர் என்ன கேள்வி கேட்டாரோ, அதையே மகேந்திரரும் கேட்டார். ''நரசிம்மா! சிவகாமி எங்கே?'' என்றார்.

நரசிம்மர் மிக்க வேதனை அடைந்தவராய், ''அப்பா! அதைப் பற்றி இப்போது என்ன கவலை? முதலில் தங்களுக்கு உடம்பு நன்றாய்க் குணமாகட்டும்!'' என்றார்.

''மாமல்லா! சிவகாமியிடம் நீ காதல் கொண்டதாகச் சொன்னதெல்லாம் வெறும் வார்த்தை என்று இப்போது தெரிகிறது. இதோ நான் கிளம்புகிறேன், சிவகாமியைக் கண்டு பிடித்துக் கொண்டு வர!'' என்று சொல்லிய வண்ணம் மகேந்திர பல்லவர் படுக்கையி லிருந்து எழுந்திருக்க முயன்றார்.

மாமல்லர் வெட்கமும் பரபரப்பும் கொண்டவராய்க் கூறினார்: ''அப்பா! தங்களுக்கு உடம்பு குணமாவதற்காகவே காத்திருந்தேன். தாங்கள் என்ன சொல்வீர்களோ என்று சந்தேகமா யிருந்தது. தாங்களே இப்படிச் சொல்லும்போது....''

''வேறு என்ன நான் சொல்வதற்கு இருக்கிறது? மாமல்லா! ஆயனருடைய சிற்பத் திறமையும், சிவகாமியின் நடனத் திறமையும் இமயத்தி லிருந்து குமரி வரையில் பரவியிருக்கின்றன. அப்படிப்பட்ட சிவகாமியை அந்த வாதாபி ராட்சதன் கொண்டு போய் விட்டான் என்றால், அதைக் காட்டிலும் பல்லவ குலத்துக்கு வேறு என்ன அவமானம் வேண்டும்? அப்படிப் பட்ட அவமானத்தைச் சகித்துக் கொண்டு உயிரோடிருப்பதைக் காட்டிலும், போர்க்களத்திலேயே என் உயிர் போயிருந்தால் எவ்வளவோ நன்றாயிருக்கும்.''

''தந்தையே! இப்படியெல்லாம் பேச வேண்டாம். தங்களுக்கு உடம்பு குணமானதும் தங்களிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்படுவதற்கு நானும் தளபதியும் ஆயத்தம் செய்திருக்கிறோம்......''

''என்ன ஆயத்தம் செய்திருக்கிறீர்கள்?''

''படை திரட்டிச் சேர்த்திருக்கிறோம்.''

''புத்திசாலிகள்தான்! படைகளுடன் சென்றால் சிவகாமியையும் கொண்டு வர மாட்டீர்கள். நீங்களும் திரும்பி வர மாட்டீர்கள்.''

மாமல்லர் வியப்புடன், ''அப்பா! வேறு என்ன செய்வது? தங்களுடைய யோசனை என்ன?'' என்றார்.

''பரஞ்சோதியையும், சத்ருக்னனையும் அழைத்துக் கொண்டு வா! என்னுடைய யோசனையைச் சொல்கிறேன்'' என்றார் மகேந்திரர்.

அவ்விதமே மாமல்லர், பரஞ்சோதி, சத்ருக்னன் ஆகியவர்கள் அன்று மகேந்திர சக்கரவர்த்தியிடம் வந்தபோது, அவர்



தமது யோசனையைக் கூறினார். பரஞ்சோதியும் சத்ருக்னனும் மாறு வேடம் பூண்டு வாதாபிக்குப் போய்ச் சிவகாமியை அழைத்து வரவேண்டும் என்பதுதான் அந்த யோசனை. அப்படித் திருட்டுத்தனமாய்ப் போய்ச் சிவகாமியை அழைத்துக் கொண்டு வருவது பற்றி முதலில் மாமல்லர் ஆட்சேபித்தார். திருட்டுத்தனமாய்க் கொண்டு போகப்பட்டவளை அதே முறையில் திருப்பிக் கொண்டு வருவதில் தவறில்லை என்று மகேந்திரர் சொன்னார். அதோடு அவ்விதம் இப்போது ஒரு தடவை வாதாபிக்குப் போய்விட்டு வருவது பின்னால் அவர்கள் வாதாபிமேல் பகிரங்கமாகப் படையெடுத்துப் போவதற்கு அநுகூலமாயிருக்கும் என்று மகேந்திர சக்கரவர்த்தி தெரிவித்தார்.

வாதாபி மீது படையெடுக்கும் யோசனை மகேந்திர பல்லவருக்கு இருப்பது தெரிந்ததும் மாமல்லருக்கும் உற்சாகம் உண்டாகித் தம்முடைய ஆட்சேபங்களையெல்லாம் நிறுத்திக் கொண்டார். எல்லாம் பேசி முடிந்ததும் மாமல்லர் எழுந்து, தந்தைக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, ''அப்பா! தளபதியுடன் நானும் போய் வருகிறேன். கருணை கூர்ந்து அநுமதி கொடுக்கவேண்டும்!'' என்று கெஞ்சுகிற குரலில் விண்ணப்பம் செய்தார்.



மகேந்திரர் முதலில் இதை மறுதளித்தார். கடைசியில், மாமல்லரிடம் முரட்டுத்தனமான காரியங்களில் இறங்குவதில்லை என்பதாகவும், எல்லா விஷயங்களிலும் தளபதி பரஞ்சோதியின் ஆலோசனைப்படி நடப்பதாகவும் உறுதி பெற்றுக் கொண்டு, விடை கொடுத்தார்.

இரண்டு தினங்களுக்குப் பிறகு, நடுநிசி வேளையில், காஞ்சி அரண்மனை முற்றத்தில் ஆறு குதிரைகள் மீது ஆறு பேர் ஆரோகணித்துப் பிரயாணத்துக்கு ஆயத்தமாய் நின்றார்கள். தாடி, மீசை வைத்துக் கட்டிக் கொண்டிருந்த அந்த வேஷதாரிகள் மாமல்லர், பரஞ்சோதி, சத்ருக்னன், குண்டோதரன், கண்ணபிரான், அவனுடைய தந்தை அசுவபாலர் ஆகியவர்கள்தான்.

அப்படி நின்ற அறுவரும் அரண்மனை மேல் மாடத்தின் முன்றிலை அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் அந்த முன்றிலுக்கு மகேந்திர சக்கரவர்த்தியும் புவனமகாதேவியும் வந்து சேர்ந்தார்கள்.

''புறப்படுங்கள். ஜயத்துடன் சீக்கிரம் திரும்புங்கள்'' என்று மகேந்திர பல்லவர் கூறியதும் மாமல்லரும் பரஞ்சோதியும் அவர்களைப் பார்த்து வணங்கிவிட்டுக் குதிரைகளைத் தட்டிவிட்டார்கள். *

குதிரைகள் அரண்மனை வெளி வாசலைக் கடந்து வீதிக்குப் போனதும், புவனமகாதேவியை மகேந்திர பல்லவர் பார்த்து, ''தேவி! இராஜ குலத்தில் பிறந்ததற்குத் தண்டனை இது!'' என்று சோகம் ததும்பும் குரலில் கூறினார்.

## நாற்பத்தைந்தாம் அத்தியாயம்

# மகேந்திரர் அந்தரங்கம்

அன்றிரவு மகேந்திர பல்லவரும் அவருடைய பட்டமகிஷி புவன மகாதேவியும் கண்ணுறங்கவேயில்லை.

அரண்மனை மேல்மாடத்தில் வெள்ளி நட்சத்திரங்களை அள்ளித் தெளித்திருந்த வான விதானத்தின் கீழ் அமர்ந்து, சென்ற காலத்தையும் வருங்காலத்தையும் பற்றி அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''தேவி! என் வாழ்நாளில் இறுதிக் காலத்தில் இப்படி எனக்கு ஆசாபங்கம் உண்டாகுமென்று நான் எதிர்பார்க்கவேயில்லை. என்னுடைய கனவுகளெல்லாம் சிதைந்து போய் விட்டன. துரதிர்ஷ்டத்துக்கு உள்ளானவனை அவனுடைய அந்தரங்க சிநேகிதர்கள் கூடக் கைவிட்டு விடுவார்கள் என்று அரசியல் நீதி கூறுவது எவ்வளவு உண்மை! அதோ வானத்தில் ஜொலிக்கும் நட்சத்திரங்கள் முன்னேயெல்லாம் என்னைப் பார்த்து, 'மகேந்திரா! உன்னைப் போன்ற மேதாவி இந்தப் பூவுலகில் வேறு யார்? உன்னைப் போன்ற தர்மவான், குணபரன், சத்ருமல்லன், கலைப் பிரியன் வேறு யார்?' என்று புகழ்மாலை

* அட்டைப்படம்: விஜு

பாடுவது வழக்கம். இப்போது அதே நட்சத்திரங்கள் என்னைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டிக் கேலிச் சிரிப்புச் சிரிக்கின்றன. 'மகேந்திரா! கர்வ பங்கம் போதுமா? உன்னுடைய அகட விகட சாமர்த்தியங்கள் எல்லாம் விதியின் முன்னால் பொடிப் பொடியாகப் போனதைப் பார்த்தாயா?' என்று கேட்கின்றன....''

மகேந்திரருடைய உடம்பும் உள்ளமும் வெகுவாக நொந்திருந்தன என்பதைச் சக்கரவர்த்தினி அறிந்தவளாதலால், அவர் மனத்தை மேலும் புண்படுத்த விரும்பவில்லை. ஆயினும் அவளை அறியாமல் அந்த வார்த்தைகள் வெளி வந்தன: ''பிரபு! நாமாகச் செய்து கொள்ளும் காரியத்துக்கு விதி என்ன செய்யும்?''

இதைக் கேட்ட மகேந்திர பல்லவர் சோகப் புன்னகை புரிந்து, ''மனிதர்களாகிய நாம் எவ்வளவு சாமர்த்தியமாகக் காரியம் செய்தாலும் விதி வந்து குறுக்கிட்டு எல்லாவற்றையும் கெடுத்துவிடத்தான் செய்கிறது. என்னுடைய காரியங்களைக் கெடுப்பதற்கு விதியானது சிவகாமியின் ரூபத்தில் வந்தது!'' என்றார்.

''ஆ! அந்த ஏழைப் பெண்ணின்மீது ஏன் பழியைப் போடுகிறீர்கள்? அவள் என்ன செய்வாள்?'' என்று இரக்கம் ததும்பிய குரலில் கூறினாள் பல்லவர் தலைவி புவனமகாதேவி.

''பெண்ணுக்குப் பெண் பரிந்து பேசுகிறாய். அது நியாயம்தான். ஆனாலும் ஆயனர் மகளின் காரணமாகத்தான் என்னுடைய உத்தேசங்கள் எல்லாம் பாழாய்ப் போயின. சிவகாமியிடமிருந்து மாமல்லனைப் பிரித்து வைக்க நான் முயன்று வந்தேன். அதற்காக என்னவெல்லாமோ சூழ்ச்சிகளும் தந்திரங்களும் செய்தேன். நான் செய்த சூழ்ச்சிகளும் தந்திரங்களும் ஒன்றும் பயன்படாமல் போயின. விதிதான் கடைசியில் வெற்றி பெற்றது.''

''விதியானது உங்களுடைய நோக்கத்தைத்தானே நிறைவேற்றி வைத்தது? அந்தப் பெண்ணிடமிருந்து மாமல்லனைப் பிரிப்பதற்குத் தாங்கள் எத்தனையோ ஏற்பாடுகள் செய்தீர்கள். விதி உங்கள் ஒத்தாசைக்கு வந்து, அவளை வாதாபிக்கே கொண்டு போய் விட்டது. அப்படியிருக்க, அவளைத் தேடி அழைத்துக் கொண்டு வருவதற்கு நீங்கள் ஏன் பிரயத்தனம் செய்ய வேண்டும்? தங்களுடைய காரியம் எனக்கு விளங்கவில்லையே?'' என்று புவனமகாதேவி உண்மையான திகைப்புடன் கேட்டாள்.

''அதைத்தான் அப்போதே சொன்னேன். பழமையான பல்லவ குலத்திலே பிறந்ததற்குத் தண்டனை இது. சிவகாமியைத் திருப்பிக் கொண்டு வராவிட்டால் பல்லவ குலத்துக்கு என்றென்றைக்கும் மாறாத அவமானம் ஏற்படும். புலிகேசி காஞ்சிப் பல்லவனை முறியடித்துவிட்டு ஊர் திரும்பியதாகப் பெருமையடித்துக் கொள்வான். சிவகாமி வாதாபியில் இருக்கும் பட்சத்தில் புலிகேசியின் ஜம்பத்தையே உலகம் நம்பும்படி இருக்கும். சிவகாமியின் புகழ் ஏற்கெனவே இலங்கை முதல் கன்யாகுப்ஜம் வரையில் பரவியிருக்கிறது. மாமல்லபுரத்துச் சிற்பங்களையும் சிவகாமியின் நடனத்தையும் வந்து பார்த்துவிட்டுப் போக வேண்டும் என்று நானே ஹர்ஷவர்த்தனருக்கு ஓலை அனுப்பியிருந்தேன். அப்படிப்பட்ட



சிவகாமி வாதாபியில் சிறை வைக்கப்பட்டிருந்தால் உலகம் என்ன நினைக்கும்? பல்லவ குலத்துக்கு அதைக் காட்டிலும் வேறு என்ன இழிவு வேண்டும்?''

''சுவாமி! தாங்கள் தலையில் அணியும் கிரீடத்தைச் சில சமயம் நான் கையிலே எடுத்துப் பார்த்திருக்கிறேன். அதனுடைய கனத்தை எண்ணி 'இவ்வளவு பாரத்தை எப்படித்தான் சுமக்கிறீர்களோ!' என்று ஆச்சரியப்பட்டிருக்கிறேன். ஆனால், இந்த இரண்டு மூன்று வருஷங்களிலேதான் எனக்குத் தெரிந்தது, தலையிலே அணியும் மணிமுடியைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு பாரத்தைத் தங்கள் இதயத்திலே தாங்க வேண்டியிருக்கிறதென்று. 'இராஜ்ய பாரம்' என்று உலக வழக்

பால் குடிக்க
மறுக்கும் பிள்ளைக்கு
பல்சுவையுள்ள
கஸ்டார்டு தாருங்கள். அது
அள்ளிப் பருகுவதைப்
பாருங்கள்!





உங்கள் பிள்ளை பால்குடிக்க மறுக்கிறதா? கவலைப்படாதீர்கள். அதற்கு இன்சுவையுள்ள ஊட்டமிக்க கஸ்டர்டு தாருங்கள், அது மகிழ்வுடன் சாப்பிடும். அதைத் தயாரிக்கும் முறை மிகவும் எளிது. 4 தேக்காண்டியளவு **பிரவுன் & போல்ஸன்** கஸ்டர்டு பவுடர், 3 தேக்காண்டியளவு சர்க்கரை, சிறிதளவு குளிர்ந்த பால், மூன்றையும் கலந்து விழுதுபோல் ஆக்குங்கள். பிறகு ஒரு கோப்பை பாலை சூடாக்கி, அதில் இந்த விழுதைக் கரையுங்கள். கொதிக்கும்வரை கிளறுங்கள். பின்னர் நெய் தடவிய தட்டில் ஊற்றுங்கள். அது குளிர்ந்து படியட்டும். நாள்தோறும் உங்கள் பிள்ளைக்குப் பால் கொடுக்கும் சுவையான வழி இது!



பழ ஸாலடைக் கிண்ணத்தில் எடுத்து, கஸ்டர்டால் அலங்கரியுங்கள். இப்போது கேக்கின்மீது கஸ்டர்டு தடவி, சுவையைக் கூட்டுங்கள், ஜெல்லியின்மீது கஸ்டர்டு தடவிப்பாருங்கள். எல்லாம் சுவை மயம்! இத்தகைய கஸ்டர்டு தயாரிக்க, 1½ தேக்காண்டி **பிரவுன் & போல்ஸன்** கஸ்டர்டு பவுடர், 3 தேக்காண்டியளவு சர்க்கரை, சிறிதளவு குளிர்ந்த பால், மூன்றையும் கலந்து விழுதுபோல் ஆக்குங்கள். ஒரு கோப்பை பாலை சூடாக்குங்கள். அதில் கஸ்டர்டு பவுடர் விழுதைக் கரைத்து, கொதிக்கும்வரை கிளறுங்கள். அதை சூடாகவோ குளிர்ந்ததாகவோ உங்கள் பிள்ளைக்குத் தாருங்கள். சுவையோ சுவை!



ஒரு விசேஷ முறை : நீங்கள் வீட்டிலேயே இஸ்க்ரீம், ஃபலூதா, பாயசம், ரபடி தயாரித்தால் பாலைக் கெட்டியாக்க **பிரவுன் & போல்ஸன்** கஸ்டர்டு பவுடரையும் சேர்க்கவும். ஒவ்வொரு தித்திப்பும் இரட்டிப்பு சுவை தரும்!
இதற்கு வெரய்டி கஸ்டர்டு பவுடரை உபயோகியுங்கள். வனில்லா, ஆரஞ்சு, பழுஹ, ஸ்ட்ராபர்ரி, லெமன், ரஸப்பர்ரி, ஆகிய 6 கனிச் சுவையுள்ள கஸ்டர்டு பவுடர்கள் உள்ளன.

முட்டை கலவாதது

6 இனிமையான சுவைகள் கொண்ட வெரய்டி கஸ்டர்டு பவுடர் பாக்கெட்டும் கிடைக்கிறது.




அருமையான பொருள்களிலிருந்து, மிகுந்த கவனத்தோடு பக்குவப்படுத்தப்பட்டதால், கஸ்டர்டு பவுடர்களிலேயே மிகச் சிறந்தது **பிரவுன் & போல்ஸன்.** ஒரு டின் கைவசம் இருக்கட்டும்—எப்போதுமே!



**கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்.**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-400 001.

# பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர்

கிலே சொல்வது எவ்வளவு உண்மையான வார்த்தை?'' என்று சக்கரவர்த்தினி உருக்கமான குரலில் கூறினாள்.

''ஒரு காலத்தில் அந்தப் பாரத்தை நான் வெகு உற்சாகத்துடன் தாங்கினேன். இப்போது அதுவே தாங்க முடியாத பெரும் பாரமாய் என் இருதயத்தை அமுக்குகிறது. தேவி! மூன்று வருஷங்களுக்கு முன்புவரையில் நான் ஆகாசக் கோட்டைகள் கட்டி வந்தேன். ஆம்! காஞ்சிக் கோட்டையை அலட்சியம் செய்துவிட்டு ஆகாசக் கோட்டைகள் கட்டினேன். இந்தப் பூவுலகத்தைச் சொர்க்க பூமியாகச் செய்துவிடலாம் என்று கருதினேன். என்னுடைய மூதாதையர்களையெல்லாம் மனத்துக்குள் நிந்தித்தேன். வீணாகச் சண்டை பூசல்களிலும் இரத்தக் களறிகளிலும் அவர்கள் காலத்தைக் கழித்தார்களே என்று வருத்தப்பட்டேன். மாமல்லபுரத்தில் எல்லாச் சமயங்களுக்கும் அழியாத கற்கோயில்களைக் கட்டத் தொடங்கினேன். கோயில்கள் கட்டி முடிந்ததும் ஹர்ஷனையும் புலிகேசியையும் அழைக்க நினைத்திருந்தேன். இந்த ஆகாசக் கோட்டைகளையெல்லாம் அந்தச் சளுக்க அரசன் பொடிப் பொடியாக்கி விட்டான். அவன் தொண்டை மண்டலத்துக் கிராமங்களில் வைத்த தீ சீக்கிரத்தில் அணையப் போவதில்லை. பல்லவர் படை வாதாபிக்குப் போய்ப் புலிகேசியை முறியடித்தாலொழியப் பல்லவ குலத்துக்கு நேர்ந்த அவமானம் தீரப் போவதில்லை. இது என் காலத்தில் நிறைவேறாவிட்டால் மாமல்லனுடைய காலத்திலாவது நிறைவேறியாக வேண்டும்.''

''பிரபு! என் வீர மகன் நிச்சயமாகத் தங்கள் மனோரதத்தை நிறைவேற்றுவான். பல்லவ குலத்துக்கு நேர்ந்த பழியைத் துடைப்பான்!'' என்று புவன மகாதேவி பெருமிதத்துடன் கூறினாள். (தொடரும்)

# வட்ட மேஜை

தமிழ் நாட்டைப் பொறுத்தவரை பெருத்த தோல்வி கண்ட ஹிந்தி மீண்டும் வாலாட்ட ஆரம்பித்திருக்கிறது. தமிழ் நாட்டில் செளராஷ்டிர பிராமணர்கள் சுமார் ஐந்து லட்சம் பேர் இருப்பார்கள். அவர்கள் பேசும் பாஷைக்கென்று தனியாக ஒரு லிபி இருக்கிறது. அதை வேண்டும் என்றே தள்ளி வைத்துவிட்டுத் தேவநாகரி (ஹிந்தி) லிபியில் சொல்லித் தர வேண்டும் என்று அரசியல் பின்னணியில் சிலர் மதுரையில் தலையெடுத்திருக்கிறார்கள். இவர்களுக்குச் சென்னை தக்ஷிண பாரத் ஹிந்தி பிரசார சபா தேவநாகரி எழுத்தில் புத்தகம் அச்சடித்துக் கொடுத்திருக்கிறது. தமிழர்களிடம் வாலாட்ட முடியாததால் தமிழகத்தில் மொழிவாரிச் சிறுபான்மையினர் ஆக உள்ள செளராஷ்டிரர்களிடம் மொழி வளர்ச்சி என்ற பெயரில் தேவநாகரியைத் திணிக்க முயற்சி செய்கிறார்கள். ஏமாந்தவர் தலையில் மிளகாய் அரைக்கப் பார்க்கிறார்கள். தக்க தருணத்தில் விழித்துக் கொண்ட செளராஷ்டிர இளைஞர்கள் இந்த முயற்சிக்கு எதிராக வெகுண்டு எழுந்துள்ளார்கள். சரியான சமயத்தில் வெளியான தங்கள் தலையங்கம் ஹிந்தி வெறியர்களைச் செயலிழக்கச் செய்யும் என நம்புகிறேன்.

மதுரை — 9
24–1–75 பார்வதி மணாளன்

“ஆ, மந்திரக்காளி!'' என்ற பகுதியைப் பார்த்தேன். அதில் மந்திர மாயங்கள் எல்லாமே பொய் என்பதாகத் தொனிக்க எழுதப்பட்டிருக்கிறது. விஞ்ஞானிகளின் ஆராய்ச்சிக்கும் அறிவுக்கும் எட்டாத பல மாந்தரீக விஷயங்கள் உலகில் உள்ளன. வேதத்தில் இது பற்றிப் பல விஷயங்கள் உள்ளன. பாம்பு கடிபட்டவர்களை வெறும் வாய் மந்திரத்திலேயே பிழைக்க வைப்பதைக் கிராமங்களில் இன்றைக்கும் காணலாம். நீர் இறங்காது வயிறு பானை போல் வீங்கிப் புதுவை மருத்துவ மனையில் கைவிடப்பட்ட ஒருவருக்கு முஸ்லீம் ஒருவர் கோழி முட்டை மந்திரித்துக் கொடுத்து இரண்டு மணி நேரத்தில் தானாக நீர் பிரியும்படி செய்து பிழைக்க வைத்தார். இதைப் பெயர் ஊர் விவரத்துடன் என்னால் நிரூபிக்க முடியும். சாமி ஆடுபவர்கள் எதிர்காலம் பற்றிக் கூறி அவை அற்புதமாக நடந்தேறி இருப்பதை நானே சோதித்து அறிந்திருக்கிறேன்.

ரேடியோவில் உள்ள மீட்டரைக் கண்டு பிடித்த சர் வில்லியம் க்ரூக்ஸ் என்ற விஞ்ஞானி ஆவிகள் இருப்பதாக ஒப்புக்கொண்டு புத்தகம் எழுதினார். தமிழ் நாட்டில் மதுரை ஆதீன சோமசுந்தரத் தம்பிரான் அவர்கள் இத்துறையில் பல வருட அனுபவமும் ஆராய்ச்சியும் உள்ளவர்.

விக்கிரவாண்டி
25–1–75 வி. ரவிச்சந்திரன்

‘ஆ, மந்திரக்காளி!' என்ற கட்டுரையைப் படித்த பொழுது, எங்கள் கிராமத்திலும் சுற்றுப்புறங்களிலும் இத்தகைய பில்லி சூன்யங்களுக்கு மக்கள் கொடுக்கும் மதிப்பு அதிகமாக இருக்கிறதே என்று எனக்கு மிகவும் வேதனையாக இருந்தது. பட்டிதொட்டிகளில் நிலவும் மூட நம்பிக்கைகள் அகல இது போன்ற கட்டுரைகள் பெரிதும் உதவும்.

மாயூரம் சின்னி ஆர். ராமன்



## தவப் புதல்வி

சாந்தி நிலையம் அளிக்கும் இந்நாடகத்தில், முதல் 'புதுமை நாடக ஆசிரியரே முக்கிய பாத்திரம் ஏற்று நடிப்பது. எஸ். கஜேந்திர குமார் 'ஹிப்பி' சேகராக வந்து தம் நடிப்புத் திறமையால் நாடகத்துக்கு நல்லதொரு சுவையை அளித்திருக்கிறார். பால்ய விவாகம் இப்பொழுது நடைபெறுத ஒன்று என்றுலும் நாடகத்தில் அதை வைத்துக் கொண்டு ஒரு வெண்ணிற ஆடைப் பாத்திரத்துக்கு அடிகோலிக் கடைசியில் சுபமாக முடிக்கப்பட்டிருக்கிறது.

நாடகத்தில் வரும் இரு பெண் பாத்திரங்களும் இரு வேறு இயல்பு கொண்டவை. ராதா, நவநாகரிக யுவதி. முற்போக்குக் கொள்கைகளில் ஊறினவள். அவள் அண்ணி ஜானகி பழைமையான பண்பாட்டில் ஊறிய பெண். இந்த மாறுபாடே கடைசி வரையில் நாடகம் அலுப்புத் தட்டாமல் இருக்கத் துணை செய்கின்றன.

கதாநாயகி "சிவந்த மண்" சினிமாப் புகழ் காஞ்சனா. நல்ல எழிலான தோற்றத்துடன் ஒயிலாகப் பல்வேறு நவநாகரிக அலங்காரங்களில் மேடையில் உலவி ரசிகப் பெருமக்களை மகிழ்விக்கிறார். முதலில் வந்த நவநாகரிகக் காட்சிகளுக்கெல்லாம் சவால் விடுகிற மாதிரி சாந்தமாக மாறிவிடும் நாடகத்தின் பிற்பகுதியிலும் சிறப்பாக நடித்தார்.

தில்லை ராஜன் ஹீரோ. அமைதியான நடிப்பு; தெளிவான பேச்சு.

ஸா பாயிண்ட் ராஜகோபால் நகைச் சுவையை நயமாகக் கையாண்டிருக்கிறார். சில இடங்களில், ஒரு பியூன் பேச்சாக இராமல் சற்று அதிகப்பிரசங்கித்தனமாக இருந்தாலும் நாடகத்தின் நகைச் சுவையைக் கருதி அதை மன்னித்துவிடலாம்.

ஜானகியாக வரும் வந்தனா, பண்பில் சிறந்த பதவிசான குடும்பப் பாங்கு கொண்ட பெண்ணாக நடித்து நாடகத்துக்குக் கனிவூட்டுகிறார்.

"தவப் புதல்வி"யைத் தவமிருந்து தமிழகம் பெற்ற நாடகமாகக் கருத முடியாவிட்டாலும் பொழுதுபோக்கு அம்சங்கள் கொண்ட நல்ல நாடகம் எனலாம்.



## சந்ததி

குடும்பப் பெருமை, அந்தஸ்தைப் பற்றிப் பெருமிதம் கொண்டிருந்த ஒரு பணக்காரரைப் பற்றிய நாடகம். அவரது பெருமித உணர்ச்சிக்குச் சவுக்கடி கிடைக்கிறது. அதுவும் அவர் குடும்பத்துடன் நெருங்கிப் பழகிய ஒரு பெரிய மனிதரிடமிருந்தே தோன்றியது.

அந்தஸ்துப் பித்துப் பிடித்த பெரிய மனிதர் செண்பகராமனாக வரும் மேஜர் சுந்தரராஜன்தான் இந்நாடகத்தின் முக்கிய பாத்திரம். அவரை வைத்துத்தான் நாடகம் பின்னப்பட்டிருக்கிறது. அந்தஸ்தின் பெருமிதத்தில் மிதந்தபோது உயர்ந்த நடிப்பு, கடைசியில் அந்தஸ்து கீழே இறங்க நேர்ந்த நிலையில் இறங்கிவிடவில்லை.

செண்பகராமனின் ஏக புதல்வனாக வரும் நரசிம்மனுக்கு மேடைக்கேற்ற நல்ல தோற்றம் இருக்கிறது. நடிப்பிலும் முன்னேற்றம் காண வேண்டும். செண்பகராமனின் நண்பன் பெரியநாயகமாக நடித்த எஸ். ஆர். வீரராகவன் அருமையாக நடித்தார்.

பானுமதி முதலில் கவர்ச்சி உடையில் வந்து களிப்பூட்டினார். பிற்பகுதியில் அவரது உருக்கமான நடிப்பு பாத்திரத்துக்குப் பொருத்தமாக இருந்தது.

இந்த நாடகத்துக்கே இன்றியமையாத பாத்திரம் டாக்டர் சாமிநாதன். அவர் ஒரு வயோதிக டாக்டர். நாடகத்தின் 'ட்விஸ்ட்', 'ஸஸ்பென்ஸ்' எல்லாம் அவரிடம்தான் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. திறமையான நடிப்பும் அவரிடமிருந்து வந்தது. அமைதியான, அற்புதமான நடிப்பு! செண்பகராமனின் மூர்க்கத்தனமான கொள்கையைத் தகர்த்து, ஒரு பெண்ணை வாழ வைத்த அந்த டாக்டர் பாத்திரத்தை ஏற்ற வி. ராஜகோபால் பாராட்டுக்குரியவர்.

கதை, வசனம் எழுதிய கௌசிக் ஒரு புதுமையான கருத்தை மேடையில் நன்கு வெளியிட்டிருக்கிறார்.

-காந்தன்

# பொன்னியின் புதல்வர்



## 29. ஆசிரம வாழ்க்கை

சுந்தா

எளிமையே இனிமை ;
உழைப்பே உவகை.

திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தின் பொன் விழா ஆண்டு மலரில் கதர் ஜிப்பாவும், காந்திக் குல்லாவும் அணிந்த வட நாட்டுப் பெரியார் ஒருவரின் உருவப் படம் முழுப் பக்கம் ஒன்றில் இடம் பெற்றுள்ளது.

அதன் அடியில் உள்ள குறிப்பு :

காந்தீயச் சகாப்த துவக்கத்தில் சுக வாழ்வையும் பொருளீட்டுதலையும் துறந்து, தரித்திர நாராயணன் சேவையில் ஈடுபட்ட தியாகச் செம்மல் சேத் ஜம்னுலால் பஜாஜ்.

காந்தி ஆசிரமம் இன்னும் மற்ற சகோதர ஸ்தாபனங்கள் தோற்றுவித்ததில் பெரும் பங்கு கொண்ட மகான்.

இந்த மார்வாடி செல்வந்தர், மகாத்மாவின் அன்புக் கட்டளையின்படி, கதர் இயக்கத்துக்கென அகில இந்திய சர்க்கா சங்கத்தையும், கிராமத் தொண்டுக்கென காந்தி சேவை சங்கத்தையும் தோற்றுவிப்பதற்குப் பெரும் அளவில் பண பலம் அளித்து, அவற்றின் தலைவராய் இருந்து பணி புரிந்தார்.

இரண்டாவது சங்கம் 1924ல் தோன்றியது. அதன் தமிழ் நாட்டுக் கிளையாக ஆசிரமம் அமைத்துக் கிராமத் தொண்டு செய்யும் பொறுப்பை ராஜாஜி ஏற்றுக் கொண்டு, அதற்கு ஏற்றதோர் இடத்தைத் தேடலானுர்.

சேலம் ஜில்லா திருச்செங்கோட்டுக்கு அருகில், புதுப்பாளையம் என்னும் கிராமத்து மிட்டாதார் ஸ்ரீ ரத்தினசபாபதிக் கவுண்டர், ராஜாஜியிடம் மிக்க மரியாதையும் அன்பும் கொண்டவர்களில் ஒருவர். ராஜாஜி கிராமாந்திரப் பிரதேசத்தில் ஆசிரமம் ஸ்தாபிக்க விரும்புகிறுர் என்று அறிந்ததும், அதற்கு வேண்டிய நிலம் தாம் அளிப்பதாக அவர் முன்வந்தார். சேலம் ஜில்லாவில் பொதுவாக வறண்ட பிரதேசங்களே அதிகம். அதிலும் திருச்செங்கோடு தாலூக்கா மிகவும் மோசமானது. அந்தத் தாலூக்காவில் புதுப்பாளையம் கிராமத்தில் பல ஏக்கரா விஸ்தீரணமுள்ள வளம் மிகுந்த தோட்டம் ஒன்று ஸ்ரீ ரத்தினசபாபதிக் கவுண்டருக்கு இருந்தது. தென்னை முதலிய பசுமையான மரங்கள் நிறைந்த அந்தத் தோட்டத்தை ஸ்ரீ கவுண்டர் நன்கொடையாக அளித்தார்.

(கல்கியின் ''நாட்டுக்கு ஒரு புதல்வர்'' நூல்)

அந்தத் தோட்டத்தில் 1925 பிப்ரவரி மாதம் ஆறும் தேதியன்று, காந்தி ஆசிரமத்தை ராஜாஜி நிறுவினுர்.

அதற்கு உரிய பெயருடன், புதுப்பாளையம், திருச்செங்கோடு, ராஜாஜி ஆகிய பெயர்களைக் கொண்டும், வெவ்வேறு விதமாய் அவரவர் விருப்பப்படி அதைக் குறிப்பிடுவது உண்டு.

அதை நிறுவியபிறகு சிறிது காலம் ராஜாஜிக்கு வெளியே அலுவல்கள் இருந்தன. அவை முடிந்ததும், அவர் ஆசிரமத்தில் குடியேறி மற்றத் தொண்டர்களைப் போலவே குடிசை ஒன்றில் வசிக்கத் தொடங்கினுர்.

அவருடைய கடைசிக் குமாரன் ஸ்ரீ சி. ஆர். நரசிம்மனும் இளம் புதல்வி ஸ்ரீமதி லக்ஷ்மியும் தந்தையுடன் அதே குடிசையில் வசித்து எளிய வாழ்க்கை நடத்தினுர்கள். ஆயிரக் கணக்கான மாத வருவாய் சம்பாதித்து நவநாகரிக முறையில் சகல சுக போக சௌகரியங்களுடனே வாழ்க்கை நடத்தி வந்த குடும்பம்,

தரித்திர நாராயணன் சேவையில் ஈடுபட்ட தியாகச் செம்மல் சேத் ஜம்னுலால் பஜாஜ்.



திடீரென்று வாழ்க்கை முறையை அடியோடு மாற்றிக் கொண்டு இரண்டே அறைகள் உள்ள சின்னஞ் சிறு குடிசையில் சந்தோஷமாக வசிக்கத் தொடங்கிய சம்பவத்தை நம்முடைய காலத்து அற்புதங்களில் ஒன்றாகவே சொல்ல வேண்டும். இம்மாதிரி அற்புதங்களுக்கு, மகாத்மா காந்தியின் ஆத்ம சக்தியைத் தவிர வேறு காரணம் எதுவும் சொல்ல முடியாது.

ராஜாஜி ஆசிரமத்துக்கு வந்த பிறகு கதர்த் தொண்டோடு மற்ற கிராம சேவைகளையும் காந்தி ஆசிரமம் மேற்கொண்டது. கிராமவாசிகளுக்காக இலவச வைத்திய சாலையும், இராப் பள்ளிக்கூடங்களும், கிராமப் பிரசாரமும் நடந்தன. முக்கியமாக ராஜாஜி மதுவிலக்குப் பிரசாரத்தில் விசேஷ கவனம் செலுத்தினார். (மேற்படி)

தேன் உற்பத்தியிலும் அந்த ஆசிரமம் அக்கறை கொண்டது. கங்கை, கௌரி, உமா, காவேரி முதலிய பெயர்களுடன் பல தேனீக் கூடுகள் அங்கே இருந்தன. ஆசிரமத் தொண்டர்கள் தேனீக்கள் போலவே சுறுசுறுப்பாய் உழைத்தார்கள். ''தமிழ்த் தேனீ''யாகச் சிறிது காலத்துக்கு முன்வரை ரீங்காரம் செய்து கொண்டிருந்த கல்கியும் அவர்களில் ஒருவராய்ச் சேர்ந்து கொண்டார்.

கல்கி தம்பதியர் காந்தி ஆசிரமத்தை அடைந்த சமயத்தில், ராஜாஜி வடநாட்டில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். ஆயினும் அவர் கடிதம் எழுதியிருந்தபடியால், அவர்களுடைய வரவை ஆசிரமவாசிகள் எதிர்பார்த்திருந்தார்கள். அவர்களுக்கென ராஜாஜியின் ஓட்டுக் குடிசைக்கு அருகே ஓர் ஓலைக் குடிசையைப் போட்டு வைத்திருந்தார்கள். ராஜாஜியின் குமாரரும் குமாரியும் ஆசிரமத்து நிர்வாகியும் அவர்களை வரவேற்றார்கள்.

அந்த நிர்வாகி யார் என்பதையும் மற்ற விவரங்களையும் கல்கியே சொல்லட்டும்:

திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் அப்போது மானேஜராக இருந்த ஸ்ரீ க.சந்தானம் எம்.ஏ.பி.எல்., ஏற்கனவே எனக்குப் பழக்கமானவர். திருப்பூர் கதர் போர்டில் அவரிடம் நான் வேலை பார்த்ததுண்டு. புத்தி சொல்லி நல்ல வழியில் நடத்தக்கூடிய தமையனைப் போல் அவரிடம் அன்பும் மரியாதையும் கொண்டிருந்தேன். 1920ஆம் வருஷத்தில் காந்தி மகாத்மாவின் போதனையை மேற்கொண்டு வக்கீல் வேலையை உதறித் தள்ளிய ஐந்தாறு அறிவாளிகளில் ஸ்ரீ சந்தானம் ஒருவர். ராஜாஜியிடம் அவருடைய பக்திக்கு எல்லையே இல்லை. ராஜாஜியுடன் சம நிலையில் நின்று வாதம் செய்யக்கூடியவர் அவர் ஒருவரைத்தான் நான் கண்டிருக்கிறேன். ராஜாஜியும் அவருடைய அபிப்பிராயங்களுக்கு மிக்க மதிப்புக் கொடுப்பார். மூளைக்கு அதிக வேலையைத் தரக்கூடிய எந்தக் காரியத்தையும் ஸ்ரீ சந்தானத்திடந்தான் ராஜாஜி ஒப்புவிப்பார்.

நான் வருவதற்கு முன்னாலேயே ராஜாஜியின் கடிதம் வந்திருந்தபடியால், ஸ்ரீ சந்தானம் என்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். பனை ஓலை வேய்ந்த ஒரு குடிசையை, ''இதுதான் உன்னுடைய வீடு'' என்று காட்டினார். ''இப்போதைக்கு ஆசிரமத்துக் கணக்கு எழுதும் வேலை தருகிறேன். ஆச்சாரியார் ஊரிலிருந்து வந்ததும் உசிதம்போல் மாற்றிக் கொள்ளலாம்'' என்றார்.

எனக்குக் கணக்கு எழுதும் வேலை ரொம்பப் பிரியம். தினசரிக் கணக்குப் புத்தகத்திலிருந்து பேரேட்டில் பெயர்த்து எழுதி, மாதக் கடைசி



தென்னை முதலிய பலன் தரும் மரங்கள் நிறைந்த அந்தத் தோட்டத்தை ஸ்ரீ ரத்தின சபாபதி கவுண்டர் காந்தி ஆசிரமத்துக்கு நன்கொடையாக அளித்தார்.






மதுவிலக்குப் பிரசாரத்துக்காக ராஜாஜி ஆங்கிலத்தில் வெளியிட்ட அரையணாத் துண்டுப் பிரசுரம் ஒன்றின் அட்டைப்படம்.

யில் மொத்தம் கூட்டிப் போட்டு, இரண்டு பத்தியிலும் மொத்தத் தொகை சரியாக வந்துவிட்டால், ஏதோ இமயமலையின் சிகரத்தைக் கண்டுபிடித்து விட்டது போன்ற மகிழ்ச்சி உண்டாகும். எனவே, சந்தோஷத்துடன் கணக்கு எழுதச் சம்மதித்தேன்.

பிறகு, ''சம்பளம் என்ன வேண்டும்?'' என்று கேட்டார். ''இங்கு ஏற்பாடு எப்படியோ அப்படிச் செய்யுங்கள்'' என்றேன். ''ஐம்பது ரூபாய் சம்பளம் போடுகிறேன்'' என்றார். மானேஜரான ஸ்ரீ கே. சந்தானம் எம். ஏ. பி. எல். அவர்களுக்கும் சம்பளம் ஐம்பது ரூபாய்தான் என்று அறிந்ததும் ஆச்சரியக் கடலில் மூழ்கிப் போனேன். ஆசிரமத் தொண்டர்களுக்குள்ளே சம்பள வித்தியாசம் அதிகம் கிடையாது என்று தெரிந்தது. குடும்பஸ்தர்களுக்கு மாதம் ரூபாய் ஐம்பது; பிரம்மசாரிகளுக்கு அவர்களுடைய அவசியத்தை அநுசரித்துச் சம்பளம் இருபது முதல் நாற்பது வரை தரப்பட்டது.

ராஜாஜியின் குமாரர் ஸ்ரீ சி.ஆர். நரசிம்மன் ஆசிரமத் தொண்டர்களில் ஒருவர். அவருக்கு மாதம் ரூபாய் நாற்பது சம்பளம். இந்த நாற்பது ரூபாயிலேதான் ராஜாஜி, நரசிம்மன், நரசிம்மனுடைய சகோதரி லக்ஷ்மி மேற்படி குடும்பத்துடன் வலிய வந்து ஒட்டிக் கொண்ட ஒரு நாய் — இவ்வளவு பேருக்கும் காலட்சேபம் நடந்தது என்று தெரிந்தது....

காந்தி ஆசிரமத்தில் அப்போது நடந்த முக்கியமான வேலை கதர் உற்பத்தி. சுற்றுப்புறக் கிராமங்களில் பல வீடுகளில் பழைய இராட்டைகள் பரண்களில் கிடந்தன. முன்னொரு காலத்தில் அவற்றில் நூல் நூற்றுக் கொண்டிருந்த ஸ்திரீகளும் நூற்றுக்கணக்காக இருந்தார்கள். அவர்களைத் தூண்டிப் பஞ்சு கொடுத்து நூற்கும்படி செய்ய ஆரம்பத்தில் மிகவும் பிரயாசையாக இருந்தது. நான் ஆசிரமத்துக்குச் சென்றபோது மேற்படி ஸ்திரீகளில் பலர் நூற்க ஆரம்பித்தார்கள். நூற்ற நூலை வாரத்துக்கு ஒரு முறை ஆசிரமத்தில் கொண்டு கொடுத்து, நூற்ற கூலியும் மேலும் நூற்கப் பஞ்சும் வாங்கிக் கொண்டு போவார்கள். நூலை எடை போட்டு வாங்க வேண்டும். பஞ்சை நிறுத்துக் கொடுக்க வேண்டும். தலைமுறை தலைமுறையாக அறியாமையில் மூழ்கிக் கிடந்தவர்களான அந்த ஸ்திரீகளுடன் பேரம் பேசிக் கணக்குச் சொல்லிக் கூலிப் பணம் கொடுத்து அனுப்புவது பிரம்மப் பிரயத்தனமான காரியம். பல ஸ்திரீகள் ஏககாலத்தில் பேசுவார்கள். புதிதாக அந்த ஸ்திரீகளின் பேச்சைக் கேட்பவர்களுக்கு, அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்பதே விளங்காது. சண்டை பிடிக்க ஆரம்பித்துவிட்டாலோ கேட்க வேண்டியதே இல்லை.

(பாங்கர் விநாயக ராவ் - முன்னுரை)

ஆசிரமவாசிகள் எல்லாருமே ஓய்வு நேரங்களில் நூற்க வேண்டும் என்று ராஜாஜி விதி செய்து, தாமே அதன்படி செய்து காட்டினார். கல்கியின் மனைவி ராஜாஜியின் குமாரியிடமிருந்தும் சந்தானத்தின் மனைவியிடமிருந்தும் நூற்கக் கற்றுக் கொண்டு, அவர்களுடன் உட்கார்ந்து மணிக் கணக்கில் நூற்பார். சில நாட்களில் கணவருடன் போட்டி போட்டுக் கொண்டு நூற்பார். ஒரு சமயம் ஆசிரமவாசிகள் எல்லோரும் ஓய்வில்லா ராட்டை நோன்பு ஒன்று நடத்தி, நூற்ற நூலை மகாத்மா காந்திக்குப் பிறந்த நாள் பரிசாக அனுப்பி வைத்தார்கள்.

ஆசிரமத்தைப் பார்ப்பதற்காகவும் ராஜாஜியுடன் ஆலோசனை நடத்துவதற்காகவும், தேசம் முழுவதிலுமிருந்தும் காங்கிரஸ் தலைவர்கள் வந்து கொண்டேயிருப்பார்கள். அவர்களுக்கு விருந்தளிப்பதற்காக ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் ஒவ்வொரு பண்டம் செய்து கொண்டு வரும்படி ராஜாஜி சொல்லுவார். ஒரு தரம், ருக்மிணி செய்த புளி அவல் மிக ருசியாக இருக்கவே, அதையே திரும்பத் திரும்பச் செய்து கொண்டு வரும்படி ராஜாஜி சொன்னார்.

ராஜாஜியின் குடும்பத்தாரைத் தம் குடிசையில் சாப்பிடும்படி கல்கி தம்பதியர் அடிக்கடி அழைப்பார்கள். ருக்மிணியின் சமையலைப் புகழ்ந்து கொண்டே ராஜாஜி சாப்பிடுவார். புதிதாக ஏதேனும் செய்திருந்தால், அதை எப்படிச் செய்தாள் என்று கேட்பார். கொஞ்சம் இஞ்சியும் வெங்காயமும் நறுக்கிப் போட்டுத் தேங்காயுடன் அரைத்த சட்டினி என்றால் அவருக்கு மிகவும் பிடிக்கும். கோடை காலத்தில் தாமாகவே அவர் கல்கியின் குடிசைக்கு வந்து சாத்துநீர் வாங்கிச் சாப்பிட்டு ''தேவாமிர்தமாய் இருக்கிறது'' என்பார்.

ஒரு நாள் இடைவேளைக்கு ருக்மிணி உப்புமா கிண்டி இருந்தாள். அது கொஞ்சம் கட்டி தட்டி யிருந்ததைக் கவனித்த ராஜாஜி, கட்டி தட்டாமல் இருப்பதற்கான பக்குவம் ஒன்றைச் சொன்னார். முதலில் ரவையை இலேசாக வறுத்து எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு அதை உலையில் இடுவதற்கு முன்னால் கொஞ்சம் நெய்யைக் கொதிக்கும் நீரில் ஊற்ற வேண்டும். அதன்படி மறுநாளே ருக்மிணி அம்மாள் செய்து பார்த்து, சமையல் கலையிலும் ராஜாஜி வல்லவர் என்பதைக் கண்டுகொண்டாள்.

(பின்னாளில் சென்னையில் அரசியல் தலைவராய் இருந்தபோதும் சரி, இரு முறை முதல் அமைச்சராய் இருந்தபோதும் சரி, கல்கி வீட்டுக்கு ராஜாஜி வரும் போதெல்லாம், புளி அவல் செய்து வைக்கும்படி முன்கூட்டியே சொல்லி வைப்

பார். அதை ருசித்து உண்டு, சாத்து நீரையும் பருகி ஆனந்தம் அடைவார்.)

திருச்செங்கோடு ஆசிரமத்தில் ராஜாஜியின் அன்புச் சூழலில் சுமார் மூன்று ஆண்டுகள் வசிக்கக் கொடுத்து வைத்திருந்ததை ருக்மிணி அம்மாள் எடுத்துச் சொல்கையில், எளிமையும் இனிமையும் பொருந்திய அந்த வாழ்க்கைக்கு ஈடானதை முன்னும் கண்டதில்லை, பின்னும் கண்டதில்லை என்றார்.

அந்த ஆசிரம வாழ்க்கையைப் பற்றி மீண்டும் கல்கி தொடர்ந்து:

ஆசிரம வாழ்க்கை ஆனந்தமாகத்தான் இருந்தது. அதிகாலையில் ஐந்து மணிக்கு எழுந்து பிரார்த்தனைக்குப் போய் உட்காருவது மட்டும் ஆரம்பத்தில் சிறிது கஷ்டமாய் இருந்தது. சில நாள், காலைப் பிரார்த்தனை செய்தபிறகு மறுபடியும் போய்ப் படுத்துக் கொண்டு விடுவேன். கொஞ்ச நாளைக்குப் பிறகு காலையில் எழுந்திருப்பது பழக்கமாகி விட்டது.

காலைப் பிரார்த்தனையைக் காட்டிலும், மாலை ஏழு மணிப் பிரார்த்தனை எப்போதும் சுவாரசியமாய் இருக்கும். மகாத்மாவின் ஆசிரமத்தில் நடப்பதையொட்டி, பகவத் கீதை பாராயணம், நாமாவளி பஜனை முதலியவை நடைபெறும். அவற்றோடு, ''முத்தி நெறி அறியாத'' என்னும் திருவாசகமும் ''மாற்றறியாத செழும் பசும் பொன்னே'' என்னும் அருட்பாவும் பாடப் பெறும். ''பாடப் பெறும்'' என்று சம்பிரதாயமாகத்தான் சொல்லுகிறேன். அந்தப் பாட்டுக்கள் இன்னும் உயிரோடு இருப்பது, மாணிக்கவாசகர், ஸ்ரீ ராமலிங்க ஸ்வாமிகள் ஆகியோரின் தபோ வலிமையினால்தான். மகாத்மா நடத்தும் மாலை பஜனைகளில், ஸ்ரீமதி மீராபென் என்னும் பெயர் பூண்ட மிஸ் ஸ்லேட் அம்மையார் மீராபாயின் கீதங்களைப் பாடுவதுண்டு. மீராபாயைப் போல் அவ்வளவு துரதிர்ஷ்டத்தை மாணிக்கவாசகர் செய்யவில்லை என்று சொல்லலாம். ஆனால் அடுத்தபடி துரதிருஷ்டக்காரர் என்றே சொல்ல வேண்டும். ஆசிரமத் தொண்டர்களின் சாரீரம் அவ்வளவு சுகமாய் இருக்கும். ஆசிரமத்தில் எனக்கு ஏதாவது கஷ்டம் இருந்தது என்றால், அது மேற்படி தமிழ்ப் பாடல்களைத் தொண்டர்கள் பாடக் கேட்பது ஒன்றுதான்.

பிரார்த்தனை ஒருவாறு முடிந்த பிறகுதான் உண்மையில் சுவாரஸ்யமான கட்டம் ஆரம்பமாகும். அதாவது பொது விஷயங்களைப் பற்றிச் சம்பாஷணை நடைபெறும். அரசியல் பிரச்னைகள், சமூகப் பிரச்னைகள், சமய சம்பந்தமான சந்தேகங்கள் எல்லாம் விவாதிக்கப்படும். ஆசிரமத் தலைவர் ராஜாஜி ஆசிரமத்தில் இருக்கும் காலங்களில் மேற்படி சம்பாஷணைகள் வெகு ரஸமாய் இருக்கும். அத்தகைய சம்பாஷணைகளில் கலந்து கொண்டு அநுபவிப்பதற்காக இன்னும் ஒரு ஜன்மம் இந்தப் பூமியில் எடுக்கலாம் என்று தோன்றும்.

(மேற்படி)

ராஜாஜியுடன், அவர் பக்கத்தில் அமர்ந்து வேலை செய்யும் அரிய வாய்ப்பை, விரைவிலேயே அடைந்தார் கல்கி.

ஆசிரமத்துக்கு நான் போய்ச் சேர்ந்த சில மாத காலத்துக்குப் பிறகு ராஜாஜி ஒரு நாள் என்னை அழைத்து, ''மதுவிலக்கு வேலையைத் தீவிரமாக ஆரம்பிக்கத் தீர்மானித்திருக்கிறேன்; மதுவிலக்குப் பத்திரிகையையும் உடனே ஆரம்பித்துவிட வேண்டியதுதான்'' என்றார். அந்த வேலைக்காகவே நான் ஆசிரமத்துக்குச் சென்றேனாதலால், கணக்கு எழுதும் வேலையை இன்னொருவரிடம் ஒப்படைத்து விட்டு, ஆசிரமக் காரியாலயத்திலிருந்து ராஜாஜியின் சொந்தக் காரியாலயத்துக்கு வேலை பார்ப்பதற்காகச் சென்றேன்.

ராஜாஜியின் காரியாலயம் அவருடைய வீட்டிலேயே இருந்தது. ஆசிரமத் தலைவருக்கு மரியாதை செய்வதற்காக அவருடைய வீடு கொஞ்சம் விசேஷ முறையில் கட்டப்பட்டிருந்தது. மற்றவர்களுடைய வீடுகளுக்கும் ஆசிரமக் காரியாலயத்துக்கும் மேற் கூரை பனை ஓலையினால் வேயப்பட்டிருந்தது. ராஜாஜியின் வீட்டுக்கு மட்டும் கள்ளிக்கோட்டை ஓடு போட்டிருந்தது. நானும் எனக்கு உத்தியோகத்தில் ஏதோ 'பிரமோஷன்' கிடைத்து விட்டதாகவே எண்ணிக்கொண்டு, கொஞ்சம் கர்வத்துடனேயே புதுக் காரியாலயத்துக்குப் போனேன். போன பிறகுதான் புதுக் காரியாலயத்தின் இலட்சணம் தெரிந்தது.

ஆசிரமத் தலைவரின் வீடு மொத்தம் பதினேழு அடி நீளமும் பத்தடி அகலமும் கொண்டது. நடுவில் ஒரு குறுக்குச் சுவர் மேற்படி பிரம்மாண்டமான மாளிகையை, சமையல் அறையாகவும் ஆபீஸ் ஹாலாகவும் பிரித்திருந்தது. சமையல் அறை ஏழு அடிக்குப் பத்தடி அளவு கொண்டது. இதிலேதான் ராஜாஜியின் அருமைப் புதல்வி (பிற்பாடு ஸ்ரீமதி தேவதாஸ் காந்தி) தகப்பனாருக்கும் தமையனுக்கும் சமையல் செய்தார். பத்து அடிக்குப் பத்தடி இருந்த விஸ்தாரமான ஹால், ராஜாஜியின் காரியாலயமாகவும், வந்தவர்களை வரவேற்கும் டிராயிங் ரூமாகவும், இரவில் ராஜாஜிக்குப் படுக்கும் இடமாகவும் விளங்கியது. பகல் வேளையில் எல்லாக் கயிற்றுக் கட்டில்களும் படுக்கைகளும் வெளியில் வெயிலில் காய்ந்து கொண்டிருக்கும். இரவில் ஹாலுக்குள் இடம் பெறும்....

மேற்படி பத்தடிக்குப் பத்தடி விஸ்தீரணம் உள்ள ஆபீஸ் ஹாலுக்கு நான் போய் ராஜாஜியின் பக்கத்தில் வேலை பார்க்க உட்கார்ந்தபோது அளவில்லாத உற்சாகம் கொண்டேன். அரை மணி நேரத்துக்குள்ளே உற்சாகம் எல்லாம் வியர்வையாக மாறி உடம்பெல்லாம் ஸ்நானம் செய்வித்தது.

உஷ்ணம் பொறுக்க முடியாமல், ''உஸ் உஸ்'' என்றேன். பக்கத்தில் கிடந்த காகித அட்டையை எடுத்து விசிறிக் கொண்டேன்.

''என்ன சமாசாரம்? என்ன உஸ் உஸ் என்கிறாய்?'', என்று ராஜாஜி கேட்டார்.

''ஒன்றும் இல்லை; இந்தக் கள்ளிக் கோட்டை ஓட்டுக்கு இவ்வளவு சக்தி உண்டு

என்பது இது வரையில் எனக்குத் தெரியாமல் போய்விட்டதே! வானவெளியில் உள்ள வெயில் கிரணங்களை எல்லாம் இழுத்து நம் தலை மேல் அல்லவா விடுகிறது? இந்த உஷ்ணத்தில் உட்கார்ந்து எப்படித்தான் வேலை செய்கிறீர்களோ?''

அவ்வளவுதான்; ராஜாஜி மற்ற வேலைகளை நிறுத்திவிட்டு, வெயிலின் உயர்ந்த குணங்களைப் பற்றி எனக்குச் சொல்ல ஆரம்பித்தார்.

''சென்னைப் பட்டணத்தில் இருப்பவர்கள் வெயிலில் கெடுதல் இருப்பதாக நினைக்கிறார்கள். ஊட்டிக்கும் கோடைக்கானலுக்கும் போகிறார்கள். இதைப் போல் அறிவீனம் வேறு கிடையாது. வெயில் உடம்புக்கு எவ்வளவு நல்லது தெரியுமா? அதுவும் நம் நாட்டுச் சுதேசி வெயில் இருக்கிறதே, அதனுடைய மகிமையைச் சொல்லி முடியாது. நாம் இந்த ஊர் வெயிலில் பிறந்து வெய்யிலில் வளர்ந்தவர்கள். வள்ளுவரும் கம்பரும் இந்த வெயிலில்தான் வளர்ந்தார்கள். அவர்கள் எப்படிப் பட்ட கவிதைகள் எழுதினார்கள்? வெயிலில் உள்ள 'அல்ட்ரா வயலெட்' கிரணங்களின் நோய் போக்கும் மருந்து குணத்தைப் பற்றி நீ அறிந்ததில்லையா? அதுவும் மேற்படி கிரணங்கள் கள்ளிக்கோட்டை ஓட்டின் வழியாக உஷ்ணமாய் வரும்போது அபார சக்தி உள்ளதாகின்றன. வெயிலுக்குப் பயப்படுவது சுத்தப் பிசகு!'' என்று ராஜாஜி சொன்ன வார்த்தைகளைப் பக்தி சிரத்தையுடன் கேட்டுக் கொண்டேன். ''வெயில் உடம்புக்கு நல்லது'' என்று எனக்கு நானே பல தடவை மந்திரம் போல் ஜபித்தேன். ஆனாலும் அந்தப் பாழாய்ப் போன வெயில் என்னை வறுத்து எடுக்கத்தான் செய்தது. கொஞ்ச நாளில் வேலையின் சுவாரஸ்யத்தில் தன்னை மறக்கும் நிலை ஏற்பட்ட பிறகே வெயிலின் கொடுமையையும் என்னால் மறக்க முடிந்தது.

(மேற்படி)

கறார் கண்டிப்புடன் சக்கையாக வேலை வாங்கக் கூடியவர் ராஜாஜி. வேலை வாங்குகிறவரே போதும் போதும் என்று சொன்னாலும் ஓயாமல் களைப்புச் சளைப்பின்றி வேலை செய்யக் கூடியவர் கல்கி. ஆகவே இரண்டு பேருக்கும் ஒத்துப் போயிற்று. ராஜாஜி மெச்சும் படி கல்கி பணியாற்றினார். ராஜாஜியும், என்றென்றும் கல்கி போற்றிக் கொண்டிருக்கும்படியான உத்தமத் தலைவராய்த் திகழ்ந்தார்.

பாரதியாரின் பாடல்களைத் தாம் பாடாத நாளோ, பாடக் கேட்காத நாளோ இல்லை என்று கல்கி சொன்னார் அல்லவா? அதே போல் ஆனந்த விகடனிலும், கல்கியிலும், ராஜாஜியைப் போற்றி அவர் எழுதாத வாரம் இல்லை என்றும் சொல்லலாம்.

...நான் முதன் முதலில் தேசத் தொண்டில் இறங்கியபோது, நமது தேசியத் தலைவர்களைப் பற்றி எவ்வளவோ எண்ணி இருந்தேன். அவர்களுடன் நெருங்கிப் பழகப் பழக அளவில்லாத ஏமாற்றம் அடைந்தேன். தமிழ் நாட்டிலே ஒரே ஒரு தலைவரிடத்திலேதான், நெருங்கிப் பழகப் பழக என் பக்தியும் மதிப்பும் அதிகமாயின.

தம்முடன் அந்த ஆசிரமத்தில் பணியாற்றிய தொண்டர்களில் சிலரை வெவ்வேறு கட்டுரைகளில் கல்கி அறிமுகப்படுத்தி யிருக்கிறார். அவர்களில் நால்வரை மட்டும் இப்போது சந்திப் போம்.

முதலாவதாக ஆசிரமக் கவி வேங் கடராமன்:

அவர் முகத்தைப் பார்த்ததும் இது பிறவிக் கவியின் முகம் என்று அறியலாம். காலை வேளையில் கிழக்கு நோக்கிப் பார்த்துக் கொண்டு, ''ஆ, சூரியன்! ஆஹா சூரியன்'' என்றும், மாலை நேரத்தில் கடற்கரையில் நின்று கொண்டு, ''ஆ! அலை! நுரை! மணல்! ஆகாயம்!'' என்றும் தவித்து உருகும் பேர் வழி இவர் என்பது முகத்தில் எழுதி ஒட்டியிருப்பது போல் தோன்றும்.

(ஆனந்த விகடன் 11-3-34)

பகற் கனவுகள் காணும் இந்தக் கவிஞருக்கு நேர்மாறாக, நனவு உலக விவகாரங்களையெல்லாம் நன்றாக அறிந்த மனிதர் சிவகுருநாதன்.

ஆசிரமத்தின் எந்தப் பகுதியிலிருந்தாவது, 'கலகல'வென்ற சிரிப்பொலி கேட்டுக் கொண்டிருந்தால், சிவகுருநாதன் ஆசிரமத்தில் இருக்கிறார் என்று தெரிந்து கொள்ளலாம். இவர் யாழ்ப்பாணத்துக்காரர்; பேசுவது டாக்கிகளில் பேசுவது போல் இருக்கும். அதாவது கால்வாசி புரியும்; முக்கால்வாசி புரியாது. ஆனால் சிரிப்பு மட்டும் எல்லாருக்கும் புரியக் கூடியது. உலக வாழ்க்கைக்கு வேண்டிய விஷயங்களில் சிவகுருநாதனுக்குத் தெரியாதது ஏதேனும் உண்டா என்று கண்டுபிடிப்பது மிகவும் பிரயாசை.

1. மூன்று வெள்ளாடுகள் ஒரு வேளைக்கு எவ்வளவு பால் கொடுக்கும்?

2. கம்பு எந்த மாதத்தில் பயிரிட்டு எப்போது அறுவடை செய்வது?

3. ஆறு மரக்கால் அரிசி சோற்றுப் புளியோதரை செய்வதற்கு எவ்வளவு புளி, உப்பு, மிளகாய் வேண்டும்?

4. முப்பது அடி ஆழம் உள்ள கிணற்றுக்குத் தண்ணீர் இறைக்கும் பம்பு வைக்க எவ்வளவு ரூபாய் செலவாகும்?

வரலாறு கேட்டிராத வாய்ப்பு!
வழங்குவதோ **ஸிங்கர்**

# 3 மாதங்களில் உங்கள்
# மெரிட்*
## தையல் மெஷினுக்குப்
# பணத்தைக் கொடுங்கள்

ஆனால் லிஸ்ட் பிரைஸைவிட ஒரு காசுகூட அதிகம் தராதீர்கள்!

"மிகவும் மகத்தானது"

ஸிங்கர் சிறிதும் கூடுதல் பணமின்றி தவணை முறைகளில் வாங்கும் வாய்ப்பை உங்களுக்கு அளிக்கிறது.





"என் சேமிப்பு எவ்வளவு என்பதை கணிக்க முடியுமா!"

மூன்று மாதங்களில் பணத்தைக் கொடுத்தால் எவ்வளவு சேமிக்கிறீர்கள்! லிஸ்ட் பிரைஸைவிட ஒரு காசுகூட அதிகம் தராமலேயே அதை எவ்வளவு விரைவில் திரும்பப் பெறுகிறீர்கள் என்பதைக் கண்டு நீங்களே வியப்படைவீர்கள். அதன் பிறகு எல்லாமே சேமிப்புத்தான்!

"ஒரு காசுகூட அதிகமில்லை"

வழக்கமாக தவணை முறைகளில் வாங்கும் போது சாமானின் விலை அதிகமாகிறது- காரணம்? அந்த வசதியை உங்களுக்குத் தர கம்பெனிக்கு அதிகம் செலவாகிறது. உங்கள் மெரிட் தையல் மெஷினுக்கு பணத்தைக் கொடுத்து வரும்போதே மிச்சமும் செய்கிறீர்கள் (அதற்குச் செலவு சிறிதுமில்லையே).





"அது நீடித்து உழைக்க வல்லது".

சில நாட்களே அமுலிலிருக்கும் இதைப் போன்ற சலுகையை ஸிங்கர் மட்டுமே உங்களுக்கு அளிக்க முடியும். ஆகவே முந்துங்கள். இந்த வாய்ப்பை பயன்படுத்தும் அதிர்ஷ்டசாலியாக ஏன் இருக்கக்கூடாது? அருகிலுள்ள ஸிங்கர் கடையையோ அல்லது டீலரையோ அணுகுங்கள்.

யாவரும் அறிந்த உண்மை இது. உலகத்திற்கு தையற் கலையைக் கற்பித்தவர்களே நாங்கள்தான்.

# ஸிங்கர்



*ஸிங்கர் கம்பெனியின் ட்ரேட் மார்க்

ஸிங்கர் ஸுயிங் மெஷின் கம்பெனி,
207, டி. என். ரோடு, பம்பாய் 400 001

CHAITRA-SM-79TAM

இம்மாதிரியாக என்ன கேள்வி கேட்டாலும் உடனுக்குடன் சரியான பதில்களை எதிர்பார்க்கலாம்.

(மேற்படி)

எல்லாம் தெரிந்த இவருக்குத் தப்பித் தவறித் தெரியாதது ஏதேனும் இருந்தால், அதை இராமதுரையிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். பலவற்றைத் தெரிந்தவர் மட்டும் அல்ல—

மாஜி வக்கீல் குமாஸ்தா. எனவே பேச்சில் அஸகாய சூரர். நூல்காரிகளும், தறிகாரர்களும், மோர் என்று நீர் விற்கும் பெண்மணிகளும்கூட இவரிடம் பேசி ஜயிக்க முடியாது என்றால், நீங்களும் நானும் எம்மாத்திரம் என்று சொல்ல வேண்டுமா ?

(மேற்படி)

நாலாமவர், தலைகீழ்ப் பேர்வழி, மன்னார்குடி வேங்கடராமன்; யோகாசனத்தின் மூலம் மழையைத் தடுத்து ஆசிரமத்தில் ஒரு நெருக்கடியை உண்டாக்கியவர்.

ஒரு நாள் பொழுது விடிந்து சூரியோதயம் ஆகும் சமயத்தில் ஸ்ரீ வேங்கடராமன் சிரசாசனம் செய்து கொண்டிருந்தார். அப்போது நூல் கொண்டு வந்த ஒரு ஸ்திரீ தற்செயலாக ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். அவ்வளவுதான்; அந்த மூதாட்டி தான் கொண்டு வந்த நூலைப் போட்டுக் கூலி வாங்கிக் கொள்ளக்கூட இல்லை. கிராமத்துக்குப் போய்த் தான் பார்த்த அதிசயக் காட்சியைப் பலரிடம் தெரிவித்தாள். ('காலை மேலே தூக்கிக்கிட்டு மானத்துக்குப் பழிப்புக் காட்டிக்கிட்டு இருந்தாரு'.) கேட்டவர்களில் ஒரு புத்திசாலி, ''அதனாலேதான் மழை பெய்யவில்லை!'' என்றான். மேற்படி வதந்தி கிராமம் கிராமமாய்ப் பரவிற்று. இன்னொரு பக்கத்தில், மழை பெய்யாததற்கு வேறொரு காரணமும் கற்பிக்கப்பட்டது. ஆசிரமத் தொண்டர்களில் அங்கமுத்து, முனிசாமி என்று இரண்டு ஹரிஜனங்கள் இருந்தார்கள். மற்றவர்களைப் போலவே இவர்களுக்கும் சம உரிமை அளிக்கப்பட்டிருந்தது. இவர்கள் எல்லோருடனும் சேர்ந்து உட்கார்ந்து சாப்பிட்டார்கள். எல்லோருடனும் சேர்ந்து உட்கார்ந்து பிரார்த்தனை செய்தார்கள். எவ்வித வித்தியாசமும் காட்டப்படவில்லை. ஆனால் ஆசிரமத்தைச் சுற்றியிருந்த கிராமங்களில் வசித்த கவுண்டர்மார்களோ, தீண்டாமையில் வெகு கடுமையான நம்பிக்கை கொண்டவர்கள். ''தீண்டாதவர்களும் சேர்ந்து உட்கார்ந்து சாப்பிட்டால் மழை ஏன் பெய்யும்?'' என்ற பேச்சுக் கிளம்பியது. கிளம்பி அதி வேகமாகப் பரவிற்று.

ஆகக்கூடி காந்தி ஆசிரமம் ஏற்பட்டதனாலேதான் மழை பெய்யவில்லை என்ற நம்பிக்கை பலருக்கு ஏற்பட்டுவிட்டது. மேற்படி குருட்டு நம்பிக்கையைத் துஷ்டர்கள் சிலர் தூபம் போட்டு வளர்த்தார்கள். ''ஒரு நாள் இரவு ஆசிரமத்துக் குடிசைகளையெல்லாம் கொளுத்திவிட வேண்டும்'' என்று கிராமங்களில் பேச்சு நடந்தது பற்றி அடிக்கடி செய்திகள் வந்தன. ஆசிரமவாசிகள் அப்படி ஏதாவது நடக்கலாம் என்று பிரதிதினமும் இரவெல்லாம் எதிர்பார்த்துக் கொண்டிருந்த காலமும் உண்டு.

ஆனால் அப்படி ஒன்றும் நடக்கவில்லை. நடவாததற்குக் காரணம், மேற்படி குருட்டு நம்பிக்கைகளையெல்லாம் மிஞ்சிய இன்னொரு குருட்டு நம்பிக்கைதான். அதாவது, ''வக்கீல் ஐயா (ராஜாஜி) இருக்கும்போது நமக்குக் கெடுதல் ஏற்பட விடமாட்டார்; அவரிடம் சொன்னால் சரிப்படுத்திவிடுவார்'' என்ற நம்பிக்கை மிகப் பலமாக அந்தக் கிராமவாசிகளிடையே குடிகொண்டிருந்தது. இது காரணமாகவே விஷமிகளின் துஷ்டப் பிரசாரம் எல்லாம் காரியத்தில் வராமல் போயிற்று.

(வெள்ளி மணி 29-8-47)

மேலே கண்ட நால்வரையும் வர்ணித்துள்ள இந்த வரலாற்றின் நாயகர் அந்த ஆசிரம நாட்களில் எப்படித் தோற்றம் அளித்தார் என்பதை ரா. பார்த்தசாரதி (பரதன்) வர்ணித்துள்ளார். பொருளாதார ஆராய்ச்சியாளர் ஒருவருடன் அவர் காந்தி ஆசிரமத்துக்குச் சென்றிருந்தபோது, கல்கியை முதன் முதலாகச் சந்தித்தார். அதைப் பற்றிப் பல ஆண்டுகளுக்குப் பிறகு அவர் எழுதியது:

நாங்கள் ஆசிரமத்தை அடைந்த மறுதினம் ஆசிரமவாசி ஒருவரிடமிருந்து அவருடைய குடிலுக்குச் சாப்பாட்டுக்கு அழைப்பு வந்தது. அழைப்பு நேரில்தான் வந்தது; வந்து அழைத்தவரும் சிறு வயதுதான்; ஆகிருதியும் சிறியதுதான்; குரலும் மெல்லிய, சற்றுக் கீச்சுக் குரல்; சில சமயம் இரட்டைநாதத்துடன் ஒலிக்கும். ''எங்கள் வீட்டில் இன்று சாப்பாடு வைத்துக் கொள்ளலாமே?'' என்றார் அவர். ''அதற்கென்ன பேஷாய் வருகிறோம்'' என்று ஒப்புக் கொண்டோம். அவர் வீட்டில்நல்ல விருந்தளித்தார். விருந்தைவிட நாங்கள் மேலாக ரஸித்தது, அவர் பேச்சில் இருந்த கலகலப்பும், நகைச்சுவையும்தான். ஏதோ அந்தப் பக்கத்துக் கிராமவாசி என்று முதலில் எங்களுக்குத் தோன்றி இருந்தால், அது ஒரு கணப் பொழுதில் மறைந்து, அவர் ஓர் ஆழ்ந்த அறிவாளி, பண்பு படைத்தவர் என்று அவர் பேச்சிலிருந்து தெரிந்தது. அவர்தான் ரா. கிருஷ்ணமூர்த்தி என்று தெரிந்து கொண்டோம். அதுவே எங்கள் முதல் சந்திப்பு.

(டில்லி தமிழ்ச் சங்கத்தின் 'சுடர்' கல்கி மலர்-1967)

(தொடரும்)



**விழுந்தது விக்கெட்...!**

பம்பாய் டெஸ்ட்டில் பூஜ்ய மன்னராக விளங்கிய இன்ஜினீயரின் விக்கெட் இரண்டாவது இன்னிங்ஸில் ஜூலியன் வீசிய பந்திலே பறக்கிறது!

**...தகர்ந்தது கௌரவம்**

போலீஸாரின் அடாவடித்தனத்தை அடுத்து நடந்த ரகளையில் அடிபட்டு மயங்கிய ஒரு பெண்ணைப் போலீஸ்காரர் பக்கத் துணையுடன் தூக்கிக்கொண்டு வருகிறார்!



**ராணுவ முயற்சி**

போரில் உயிர்த் தியாகம் புரிந்த வீரர்களின் மனைவிகள் திக்கற்றுப் போகாமல் வாழ ராணுவம் எடுத்துக்கொள்ளும் முயற்சி பாராட்டுக்குரியது. விமானப் போரில் தன் கணவன் மோகனைப் பறிகொடுத்த ஸ்ரீமதி கவிதா இந்தியன் ஆயில் பெட்ரோல் பங்கை நிர்வகித்து வருகிறார்.





**பண்டைக் காலப் புடைவை**

ராதா சில்க் எம்போரியத்தின் நிர்வாக டைரக்டர் திரு ஆர். கே. ராமன், பண்டைக் காலப் புடவைகள் காட்சி ஒன்று அண்மையில் நடத்தினார். 1884ம் ஆண்டு வாங்கிய காஞ்சிபுரம் பட்டுப் புடவையிலிருந்து 1930ம் ஆண்டுப் புடவைகள் வரையில் அந்தக் கண்காட்சியில் விரிக்கப்பட்டிருந்தன. அந்த நாளைய டிஸைன்களில் ஆர்டர் கொடுத்தால், அதே மாதிரி இப்பொழுதும் நெய்து தருகிறார்கள்.

**பிஸ்டல் இன்ஜக்ஷன்**

நீரழிவு நோயாளிகள் மட்டுமின்றி மற்ற நோயாளிகளும் தாங்களாகவே எளிய முறையில் 'ஊசி' போட்டுக்கொள்ளத் தக்க வகையில் 'பிஸ்டல் இன்ஜக்ஷன்' கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இது மேற்கு ஜெர்மானிய தயாரிப்பு.



## காட்சி 8

(மாசிலாமணி வீடு. சுவரில் முருகன் படங்கள் வெவ்வேறு தோற்றத்தில் மாட்டப்பட்டிருக்கின்றன. பாத்திரங்கள் : மாசிலாமணி, தாமஸ் தியாகராஜன், பாதிரியார் அருமைநாயகம். படங்களின் அருகில் நின்று மாசிலாமணி கைகூப்பி வேண்டுகிறார்.)

மாசிலாமணி :

ஏறுமயிலேறி விளையாடு முகமொன்று
ஈசனுடன் ஞானமொழி பேசுமுகமொன்று
கூறுமடியார்கள் வினைதீர்க்கும் முகமொன்று
குன்றுருவ வேல்தாங்கி நின்ற முகமொன்று
மாறுபட சூரரை வதைத்த முகமொன்று
வள்ளியை மணம்புரிய வந்த முகமொன்று
ஆறுமுகமான பொருள் நீயருள வேண்டும்
ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமானே !

முருகா !
வேல்முருகா! விநாயகா! நமச்சிவாய !
ஓம் நமச்சிவாய ! ஓம் நமச்சிவாய !

(தாமஸ் வந்து நிற்கிறான்)

ஆண்டவனே! என்னப்பா! உலகத்திலே சகல ஜீவராசிகளையும் நல்லா வாழ வை. அதுவே போதும். முருகா !

தாமஸ்: வணக்கங்க.

மாசி: வாப்பா... யாரு நீ ?

தாம: என்னைப் பாதிரியார் அருமைநாயகம் இங்கே அனுப்பிச்சார் !

மாசி : அடே! பாதிரி அனுப்பிச்சாரா ? என்ன விஷயம்? பாதிரியார் சௌக்கியமா இருக்காரா ? நல்ல மனுஷன். எனக்கு ரொம்பப் பிடிக்கும் அவரை. ஏன்னு கேளு—அவர் நல்லவர்—ஆமாம். என்ன விஷயமா அனுப்பிச்சார் ?

தாம: நான் ஒரு குற்றம் செய்துட்டேன். அவர் எனக்கு அடைக்கலம் கொடுத்தார்.

மாசி: அப்படியா....! முருகா! என்ன குற்றம் பண்ணினே ?

தாம: ஒரு பெண்ணை ஒருத்தன் கெடுக்கப் பார்த்தான். நான் பார்த்துட்டேன்.

மாசி: ஓங்கி மண்டேலே அடிச்சுக் கொலை பண்ண வேண்டியதுதானே !

தாம: அதுதாங்க செய்தேன்.

மாசி: அடப்பாவி! அப்படியேவா செய்துட்டே ! சொல்லு, சொல்லு, முருகா... சொல்லு !

தாம: நான் செய்தது சட்டப்படிகூடக் கொலைக் குற்றம் இல்லேன்னு பாதிரியார் நினைச்சு, எனக்கு அடைக்கலம் கொடுத்தார். கொஞ்ச நாட்கள் நான் போலீஸிலே மாட்டிக்காம இருந்தாத்தான் உண்மையை நிரூபிக்க முடியும்னு நினைச்சு, என்னை உங்ககிட்டே அனுப்பிச்சிருக்கார்.

மாசி: ஆமா... இதெல்லாம் பாதிரியாருக்கு எப்படித் தெரியும் ?

தாம: நான்தான் சொன்னேன். அவர் நான் நிரபராதின்னு புரிஞ்சுக்கிட்டார்.

மாசி: பாதிரியாரே சொல்லிட்டாருன்னு— நான் என்ன அதுக்கு மேலே சொல்றது ! அவர் என்னிக்குமே பொய் பேசமாட்டார். ஏன்னு கேளு. அவர் என்னை மாதிரி ஒரு பக்தர். நான் முருக பக்தன், அவர் ஏசு பக்தன். இதுலே தப்பில்லே. ஏன்னு கேளு. நான் ஹிந்து மதத்திலே பொறந்துட்டேன். அவர் கிறிஸ்துவ மதத்திலே பொறந்துட்டார். அவர் கடவுள் அவருக்கு. என் கடவுள் எனக்கு. அவரை எனக்கு ரொம்பப் பிடிக்கும். ஏன்னு கேளு! அவர் யாரையும் மதம் மாத்தற வேலே செய்யமாட்டார்.

தாம: மதம் மாறினு தப்பா ஸார் ?

மாசி: தப்பா? மடத்தனம். ஏன்னு கேளு.....?

தாம: ஏன் ?

மாசி: ஏன்னு கேக்கறே நீ! நான் யார் தெரியுமா? முருகனடி தொண்டன் மாசிலாமணி ! என்கிட்டே வந்து மதம் மாறினு என்ன தப்புன்னு கேக்கறியா நீ? கேக்கக் கூடாது! ஏன்னு கேளு! அவன் அவனுக்கு அவன் அவன் தெய்வம், அவன் அவன் மதம். அதுதான் கரெக்ட். இன்னைக்கு முருகன், நாளைக்கு ஏசு, அடுத்த நாள் அல்லா, என்ன விளையாட்டு இது? கட்சி மாத்ற மாதிரி. சே! சே! எனக்குப் பிடிக்காது. ஏன்னு கேளு! இந்து மதத்திலேயிருந்து மாறிக் கிறிஸ்தவரு போனவன்



எவனாவது என் முன்னாலே வந்தானானு செருப்பாலேயே அடிப்பேன்!

தாம: மதம் மாறினவங்களைக் கண்டா அவ்வளவு கோபமா வரும் உங்களுக்கு?

மாசி: ஆரம்பத்திலே செருப்பாலே அடிக்கலாம் போல் கோபம் வரும். அப்புறம் யோசித்துப் பார்த்தா அது தப்பு; அரிவாளை எடுத்துக் கழுத்தைச் சீவறதுதான் சரின்னு சீவிடுவேன்! ஆமா... உன் பேரென்ன?

தாம: தாம.... வந்துங்க..... தியாக ராஜன்.

மாசி: தாமல் தியாகராஜனு? தாமல்— நல்ல ஊர் அது. அந்த ஊர் கோயிலுக்கு நான் போயிருக்கேன். தாமல் நல்ல ஊர். தியாகராஜன் நல்ல பேர். வா, முருகனைக் கும்பிடு. உனக்கு ஒரு குறையும் வராது. வா.

தாம: பரவாயில்லீங்க.

மாசி: வாடான்னு... மடையா! ஏன்னு கேளு! முருகன் உன் பக்கத்திலேயே இருந்தான்னு ஒரு பய உன் பக்கத்திலே வர முடியாதுடா! வா.

(கற்பூர ஆரத்தி காட்டத் தாமலும் கண்ணில் ஒற்றிக் கொள்கிறான்)

முருகா! ஞான பண்டிதா! நமச்சிவாய. போ! இனிமே உனக்கு ஒரு பயமும் இடையாது!

தாம: பாதிரியார் சொன்னார்னு நான் சொன்னேன். உடனே சரின்னு சொல்லிட்டீங்க.... பாதிரியார் சொல்லாமலே நானே இங்கே வந்திருக்கலாமோன்னு உங்களுக்குச் சந்தேகம் வரலையா? நான் பொய் சொல்லலாமேன்னு தோணலையா?

மாசி: பாதிரியார் பேரைச் சொல்லிப் பொய் சொல்ல முடியாது. ஏன்னு கேளு? உன் நாக்கு அழுகிப் போயிடும்! அந்த நல்ல மனுஷன் பேரைச் சொல்லிப் பொய் சொன்னா, இத்தனை நேரம் பரமசிவன் நெத்திக் கண்ணைத் திறந்து உன்னைப் பொசுக்கிச் சாம்பலாக்கி யிருப்பான்! நான் உன் சாம்பல் விபூதியை எடுத்துப் பட்டை பட்டையா உடம்புலே போட்டிருப்பேன். ஏன்னு கேளு! பாதிரியார் அவ்வளவு நல்ல மனுஷன்.

தாம: ஒரு இந்து கிறிஸ்தவனா மாறுறது தப்புன்னீங்க. ஆனா ஒரு கிறிஸ்துவப் பாதிரி மேலே இவ்வளவு மதிப்பு வைச்சிருக்கீங்களே!

மாசி: அவர் மதத்து மேலே எனக்கு என்ன கோவம்? இந்து மதத்துக்கு ஒருத்தர் துரோகம் பண்ணினா கொஞ்சம் கோவம் வரும். அரிவாளாலே வெட்டுவேன், அவ்வளவுதான்! அவங்க அவங்களுக்கு ஒரு மதம். ஒவ்வொரு நம்பிக்கை. பாதிரியார் ஏசுவை நம்பறார். அதுலே தப்பில்லே. சரி... சரி.... நானே பேசிக்கிட்டிருக்கேன். நீ ஏதாவது பேசு. ஏன்னு கேளு!

தாம: வந்துங்க...

மாசி: குறுக்கே பேசாதே! கோவம் வரும் எனக்கு! நீ இன்னிக்கு இங்கே வந்தது நல்லதாப் போச்சு. ஏன்னு கேளு? நான் இன்னைக்கு ராத்திரி கும்பகோணம் போறேன். அங்கே ஒரு கோயில்லே கும்பாபிஷேகம். அப்படியே தஞ்சாவூர், திருச்சி, மதுரை, ராமேசுவரம் எல்லா க்ஷேத்திரமும் ஒரு சுத்துச் சுத்திட்டு வரேன். கவலைப்படாதே, உனக்காகவும் வேண்டிக்கிறேன். நான் வரவரைக்கும் ஜாக்கிரதையா இரு. மாட்டிக்கிடாதே. முருகனை நம்பு. காப்பாத்துவான். வா, கற்பூர ஆரத்தி காட்டலாம்!

தாம: இப்பத்தானுங்களே கற்பூரம் காட்டினோம்?

மாசி: இன்னொரு தரம் காட்டக்கூடாதா? ஒரு நாளைக்கு இரண்டு வேளை சோறு கொட்டிக்கலை? இரண்டு தரம் கற்பூரம் காட்டக்



"தாமல் தியாகராஜனு? தாமல் — நல்ல ஊர் அது. அந்த ஊர் கோயிலுக்கு நான் போயிருக்கேன்..."

கூடாதா? உம்.... வேண்டிக்க... முருகா! எல்லோரையும் காப்பாத்துரா! ...மெட்ராஸ் லேருந்து ஒருத்தர் வந்திருக்கார். அவரைப் போய்ப் பார்த்துட்டு வரணும். நீ ஜாக்கிர தையா இரு. நான் போயிட்டு வந்துடறேன். ஏன்னு கேளு.

தாம: ஏங்க?

மாசி: என் இஷ்டமடா அறிவு கெட்ட வனே. ஏன் என்ன ஏன்? இப்பத்தானே சொன்னேன்... மெட்ராஸிலேருந்து ஒருத்தர் வந்திருக்கார். அவரைப் பார்க்கணும்னு! முருகா!

பாதிமதி நதி போது மணி கூட
நாதர் அருளிய குமரேசா...

(விபூதி அவனிடம் கொடுக்க அவன் தயங்க)

(மடையா வாங்கிக்க...)

(அவன் பெற்றுக் கொள்கிறான்)

பாருகனி மொழி மாது குறமகள்

(நெத்தியிலே இட்டுக்க,...உம்)

பாதம் வருடிய மணவாளா...

(இட்டுக்கடா அறிவு கெட்டவனே! முருகன் காப்பாத்துவான்)

காதுமொரு விழி காக முறவருள்

(அவனைப் பார்த்துச் சுற்றுகிறார்)

மாயன் அரிதிரு மருகோனே

(போகிறார். தாமஸ் முருகன் படத்தைப் பார்த்து நிற்கிறான். அருமைநாயகம் வருகிறார்)

அரு: தாமஸ்!

தாம: வணக்கம் ஃபாதர்! இப்பதான் அவரு... மாசிலாமணி ஸார்... வெளியிலே போனார். இப்ப வந்துடுவார்.

அரு: நீ என்னைக்கு இங்கே வந்தாய் தாமஸ்?

தாம: இன்னிக்குத்தான். கொஞ்ச நேரம்தான் ஆவுது.

அரு: ஒரு வாரமா என்ன செய்துக்கிட் டிருந்தே?

தாம: போலீஸுக்குப் பயந்து... அங்கே இங்கே ஒளிஞ்சு இங்கே வரதுக்குள்ளே ஒரு வாரம் ஆயிடுச்சு. ஃபாதர்! உங்க மேலே போலீஸ் நடவடிக்கை எடுக்கலையா?

அரு: நடவடிக்கை எடுத்து மாஜிஸ்டிரேட் கோர்ட்டிலே கேஸ் விசாரணைக்கு வந்து நேத்துத்தான் ஒரு மாச வாயிதா கொடுத் தாங்க.

தாம: பணக்கார வீட்டுப் பையன் செத்த துனாலே கேஸ் ரொம்பத் தீவிரமா நடக்குது போலிருக்கு.

அரு: நான் இப்ப பெய்லே இருக்கேன். ஆரோக்கியசாமி, கிதா குப்புசாமி ரெண்டு பேரையும் சந்திச்சுப் பேசிட்டு வரேன்... அவங்க சொன்ன விவரங்கள் என்னை ரொம்பக் குழப்புது தாமஸ்.

தாம: என்ன சொல்றீங்க ஃபாதர்?

அரு: தாமஸ்! நீ பாவ மன்னிப்புக் கேட்டது என்கிட்டே இல்லே. ஆண்டவன் கிட்டே! நீ உன் தவற்றை ஒப்பிச்ச போது கேட்டுக் கிட்டிருந்தது நான் இல்லே, ஆண்டவன்! அவர் செவிகளில் பொய்யான வார்த்தைகள் விழக்கூடாது தாமஸ்!

தாம: நீங்க என்ன சொல்றீங்க? ஏன் என் மேலே சந்தேகப்படறீங்க?

அரு: ஆரோக்கியசாமி சொல்றதைப் பார்த்தா — நீ ஒரு பெண்கிட்டே தவறாக நடக்கிறதைப் பார்த்து அவர் மகன் உன்னை உதைச்சுட்டான். அந்தப் பகையைத்தான் அவனையே கொலை செய்து நீ தீர்த்துக்கிட்டே!

தாம: ஓஹோ! அப்படிச் சொல்றாரா? என் மேலே கேஸ் எப்படிப் போடப் போறாங் கன்னு தெரியாம இருந்தது. இப்பத் தெரிஞ் சுக்கிட்டேன்.

அரு: போலீஸ்லேயும் அப்படித்தான் ரிப் போர்ட் இருக்கு. கிதா குப்புசாமி சொல் றதைப் பார்த்தா அந்தம்மா உன் டாக்ஸிலே அன்னிக்குப் போகவே இல்லையாம். இன் ஸ்பெக்ட் அவங்க டாக்ஸியிலேயே போன இல்லையாம்.

தாம: அப்படியா சொல்றாங்க? சரியான விலாசத்துலேதானே கேட்டீங்க?

அரு: நீ சரியான விலாசம்தானே கொடுத்தே?

தாம: ஆமாம்.

அரு: அந்த விலாசத்துலேதான் கேட் டேன். — அட்ரஸ்லே தப்பு வந்துடக்கூடா தென்னு நீயே நினைக்கிறே; இல்லையா தாமஸ்?

தாம: ஆமாங்க.

அரு: நான் ஆண்டவனுடைய அட் ரஸை நம்பறேன். நீ சைத்தானுடைய அட்ரஸை நம்பிடக் கூடாது. அது தவறான விலாசம்!

தாம: ஃபாதர், நான் பெரிய சத்திய வான்னு சொல்லிக்கலே. ஆனா அன்னிக்குப் பாவ மன்னிப்புக் கேட்கணும்னு மனசார நினைச்சுத்தான் வந்தேன். நான் சொன்னதுலே ஒரு வார்த்தைகூடப் பொய் கிடையாது.

அரு: ஆரோக்கியசாமி சொன்னதைப் பத்தி நீ என்ன சொல்லறே?

தாம: அவர் வேறே எப்படிங்க சொல் வார்? தம் மகன் கேவலமா நடந்துக்கிட் டான்னு அவர் ஒத்துக்கிட்டா அவர் கௌர வம் என்ன ஆறது? அவர் சொன்னார்ங்கற துக்கா என்னைச் சந்தேகப்படறீங்க?

அரு: இந்த நிலைமையிலே யாரைச் சந் தேகிக்கிறதுன்னு தீர்மானிக்கிற அறிவை எனக்கு ஆண்டவன் கொடுக்கலே. என் கிட்டே எந்த அளவுக்கு நல்லெண்ணம் இருக் குதுன்னு எனக்கே தெரியாது. ஆனா ஒண்ணு தெரியும். எனக்கு இருக்கிற நல்லெண்ணத் திலே நாத்துக்கு ஒரு பங்குதான் என் அறிவு. தாமஸ்! அந்த அம்மா, தான் டாக்ஸியிலே போகலேன்னு சொல்றாங்களே?

தாம: அது ஏன்னு எனக்கே புரியலே. ஒருவேளை பணக்காரங்களுக்கு எதிரா— ஆரோக்கியசாமி குடும்பத்துக்கு எதிரா— சாட்சி சொல்லப் பயப்படறாங்களோ என் னமோ?

அரு: தாமஸ்!

தாம: இருங்க ஃபாதர்! அடுத்த வார்த்தை பேசறதுக்கு முன்னாலே நீங்க என்னை நம்பறீங்களா இல்லையான்னு தெரிஞ் சுக்க விரும்பறேன்.

(மாசிலாமணி பாடியபடியே வருகிறார்)

# பாங்கில் பணம் போடுவோரே! பார்த்திடுங்கள் கவனமாக!



1975 பிப்ரவரி 1ந் தேதி முதல்

# பாரத் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

(ஏழு பாங்கிகளின் பின்பலமுள்ள ஒரு ஷெட்யூல்டு பாங்க்)

## உங்களுக்கு உயர்ந்த விகிதங்களில் வட்டி அளிக்கிறது

*இதோ, நீங்களே பார்த்துக்கொள்ளுங்கள்*

| டிபாஸிட்டுகள் வகை | வருடாந்திர வட்டி விகிதம் |
|---|---|
| 1. நடப்புக் கணக்குகள் மற்றும் 14 நாட்கள் வரையான டிபாஸிட்டுகள். | வட்டி இல்லை |
| 2. சேமிப்புக் கணக்குகள். | $5\frac{1}{2}$ |
| 3. டெர்ம் டிபாஸிட்டுகள் | |
| (அ) 15 நாட்கள் முதல் 45 நாட்கள் வரையான டிபாஸிட்டுகளுக்கு | $3\frac{1}{4}$ |
| (ஆ) 46 நாட்கள் முதல் 90 நாட்கள் வரையான டிபாஸிட்டுகளுக்கு | $3\frac{3}{4}$ |
| (இ) 91 நாட்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 6 மாதங்களுக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | $5\frac{3}{4}$ |
| (ஈ) 6 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 9 மாதங்களுக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | $6\frac{1}{2}$ |
| (உ) 9 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 1 வருடத்துக்கு குறைவான டிபாஸிட்டுகளுக்கு | $7\frac{1}{4}$ |
| (ஊ) 1 வருடம், மற்றும் அதற்கு மேல் ஆனால் 3 வருடத்துக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | $8\frac{1}{4}$ |
| (எ) 3 வருடம் மற்றும் அதற்கு மேல் ஆனால் 5 வருடம் (உட்பட) வரையான காலத்துக்குரிய டிபாஸிட்டுகளுக்கு | $9\frac{1}{4}$ |
| (ஏ) 5 வருடங்களுக்கு மேற்பட்ட டிபாஸிட்டுகளுக்கு | 10 |

*சேமிப்பு அதிக ஆதாயம் அளித்திட ஓர் இடம்:*

**பாரத் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்**

பதிவு அலுவலகம்: 'ஆக்ஸ்ஃபோர்ட் ஹவுஸ்'
மவுண்ட் ரோடு, சென்னை-600 006

**கிளைகள்:**

'ஆக்ஸ்ஃபோர்ட் ஹவுஸ்'
மவுண்ட் ரோடு, சென்னை-600 006
போன்: 812983

D-28, கன்னுட் பிளேஸ்,
புது டில்லி-110 001
போன்: 42847

19/20, லிங்கி செட்டி தெரு,
சென்னை-600 001
போன்: 24656

• முகப்பருவா? • அம்மைத்தழும்பா?
• கண்ணைச்சுற்றி கருமைப்படர்ச்சியா?
கை, கால் வேர்வை அதிகமா?
உடன் நிவாரணம் பெற சிறந்தது.

## ஆதி சித்தர்
# சர்மரஞ்ஜினிபொடி

• சிறந்த பலன் பெற
ஆதி சித்தர் ராஜ பிருங்காமல தைலத்துடன்
உபயோகிக்கவும்.

**ஆதி சித்தர் வைத்தியசாலை,**
ஆர்காம் பண்டிதர் ரோடு, தஞ்சாவூர்.

---

# அறுவை சிகிச்சை இன்றியே மூலநோயைக் குணப்படுத்த அபூர்வ மருந்து!




## பிரிபரேஷன் எச் *

அமெரிக்க டாக்டர்களால் பரிட்சிக்கப்பட்டது.

- நிமிடங்களில் நமைச்சலை நிறுத்துகிறது.
- வலியிலிருந்து உடனே நிவாரணமளிக்கிறது.
- மூலநோய் கடுமையாக இல்லாவிட்டால், அறுவை சிகிச்சை இன்றியே மூலத்தைச் சுருக்க உதவுகிறது.
- இதனால் எண்ணெய்ப்பசை கிடைக்கிறது; மலப்போக்கு வலியின்றி எளிதாகிறது.

***இலவசம்!*** மூலநோய் பற்றிய விளக்கப் புத்தகமொன்றை இலவசமாகப் பெற (25 பைசா தபால் தலையுடன்) இன்றே எழுதுக. இம் முகவரிக்கு: டிபார்ட்மெண்ட், PH-66, த.பெ.எண். 10133, பம்பாய்-400 001.

* Regd. User of TM : Geoffrey Manners & Co. Ltd.

743 PH-92 Tam

---

ஆயிரம் மலர்களைப் படைத்தவன் இறைவன்!
அத்தனைக்கும் பெயரை வைத்தான் மனிதன்!!
ஓய்வு நேரத்தில் தேடினான் காபி(யை)!!!
உயர்ந்த காபி என நாடினான் அய்யங்கார் காபி(யை)!!!!




# அய்யங்கார்ஸ் காபி பவுடர்

| | | |
|---|---|---|
| தலைமை ஆபீஸ்: | கிளை: | தி.நகர், ஏஜன்ஸி, |
| 45, சுவாமி நாயக்கன் தெரு, | 15, தெற்கு மாடவீதி, | சாந்தி & கோ., |
| சிந்தாதிரிப்பேட்டை | மயிலாப்பூர், | 18, உஸ்மான் ரோடு, |
| (போன்: 24131) | (போன்: 76773) | (போன்: 446387) |

மாசி: ஆதியயனொடு தேவர் அசுரர் உலகாளும் வகையுற நிறை மீளா..... வாங்கோ... வாங்கோ! இந்தாங்கோ விபூதி! இல்லே... நீங்க வாங்கிக்க மாட்டீங்க... அங்கே ஒருத்தர் மெட்ராஸ் போயிட்டு வந்திருக்கார். கபாலீசுவரர் கோவில் பிரசாதம் வாங்கிட்டு வந்தாராம். எனக்குக் குடுத்தார்.

ஆடும் மயிலினில் ஏறி அமரர்கள் சூழ வர வரும் இளையோனே முருகா...

(தாமஸைப் பார்த்து)

வாங்கிக்கோடா

(அவன் தயங்குவதைப் பார்த்து)

வாங்கிக்கடா மடையா... முருகா! ஞான பண்டிதா.... நமச்சிவாய....

அரு: ஐயா! அவன் தன்னைப் பற்றிச் சொன்னானா?

மாசி: எல்லாம் சொல்லிட்டான். அவன் குத்தம் பண்ணினான். நீங்க அடைக்கலம் கொடுத்தீங்க. எல்லாம் சொன்னான்.

அரு: நான் சொல்றதைக் கேளுங்க மாசிலாமணி...

மாசி: ஏன், தலையெழுத்தா எனக்கு? நான் சொல்றதை நீங்க கேளுங்க! எனக்குச் சிரமமொண்ணுமில்லே. பையன் இங்கேயே தாராளமாக இருக்கட்டும். நான் கும்பகோணம் போறேன். அப்படியே மதுரை ராமேசுவரம் எல்லாம் போயிட்டு வரப் போறேன். டிரெயினுக்கு டைம் ஆறது. உங்களோட பேச நேரமில்லே. நான் இல்லாதபோது அவனை அவனேதான் ஜாக்கிரதையாப் பார்த்துக்கணும். நான் இருக்கிறபோது எவன் வந்தாலும் உட்டுட மாட்டேன். என் கழுத்தைச் சீவினாத்தான் இவனை இங்கேயிருந்து நகர்த்த முடியும். என்னு கேளுங்க! நீங்க சொல்லிட்டீங்க! ஆதான்! உம்... வரட்டுமா? டிரெயினைப் பிடிக்கணும்.

அரு: மாசிலாமணி....

மாசி (உரத்த குரலில்): போறபோது கூப்பிட்டா எனக்குக் கோபம் வரும். முருகா!

(உட்கார்ந்து பக்கத்தில் இருக்கும் பானையிலிருந்து ஒரு டம்ளர் ஜலத்தைக் குடித்த பிறகு எழுந்திருக்கிறார். அருமைநாயகம் பேச முயல்கிறார்)

....இன்னொரு தடவை போறபோது கூப்பிட்டீங்க... உம்... உம்... என்ன செய்வேன்னு எனக்கே தெரியாது! முருகா! பாதி மதி நதி போது மணி சடை நாதர் அருளிய குமரேசா...

(மாசிலாமணி வெளியே போகிறார்)

அரு: தாமஸ்... நீ மதம் மாறிய கிறிஸ்டியன்னு அவர்கிட்டே சொல்லலையா?

தாம: சொல்லலே ஃபாதர்.

அரு: ஏன்?

தாம: செருப்பாலே அடிப்பேன்னார். அப்புறம் யோசிக்கப் பார்த்துட்டு அரிவாளாலே வெட்டுவேன்னாரு! எனக்கேன் வம்பு?

அரு: இந்த மாதிரி பொய் சொல்லலாமா?

தாம: நான் பொய் சொல்லலே. அவர் என்னை மதம் மாறின கிறிஸ்துவனான்னு கேக்கலியே? அவராக நான் ஹிந்துன்னு நினைச்சுக்கிட்டார். நல்லதாப் போச்சுன்னு பேசாம இருந்திட்டேன்.

## வங்க மாப்பிள்ளைகள் !



சென்னை டெஸ்ட் மாட்சில் இந்தியா ஜெயித்தவுடன் பட்டோடிக்கு வந்த ஒரு தந்தி: ''வங்காளத்தின் மாப்பிள்ளைகள் இருவருக்கும் அவர்களது தோழர்களுக்கும் வாழ்த்துக்கள்.'' இந்தத் தந்தியை அனுப்பியவர் மே. வங்க முதல்வர் ரே. பட்டோடியும் பிரசன்னாவும் மேற்கு வங்கப் பெண்களை மணந்திருக்கிறார்கள்.

''கல்கத்தா மாப்பிள்ளைகளுக்கு அதிருஷ்டம் இருப்பதால் உங்கள் கோஷ்டியில் திருமணம் ஆகாதவர்களை மேற்கு வங்கப் பெண்களை மணந்து கொள்ளச் சொல்லுங்கள்'' என்றும் அந்தத் தந்தியில் கூறியிருந்தார்!

- டெக்கான் ஹெரால்டு

- பாலி

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

அரு: உண்மையைச் சொல்லாம இருந்திருக்கியே; அதுகூடப் பொய் சொல்ற மாதிரி தான்.

தாம: அது உங்களுக்கு! எனக்குப் பொய் சொல்லாம இருந்தாலே போதும். உங்க அளவு உண்மை வெறி பிடிச்சு அலையறது எனக்குத் தாங்காது ஃபாதர்! ஆனா நான் மனசு அறிஞ்சு பொய் சொல்றதில்லே. என் நிலைமைக்கு அது போதும்.

அரு: உம்...

தாம: ஃபாதர்! என்னை நம்பறீங்களா இல்லையான்னு கேட்டேன். பதிலே சொல்லலையே ?

அரு: என்ன பதில் சொல்றதுன்னு ஆண்டவன் இன்னும் எனக்குச் சொல்லலியே? அது தான் யோசிச்சுக்கிட்டிருக்கேன்.

தாம (விபூதிப் பொட்டலத்தைப் பிரித்துக் கொண்டே): அந்தப் பணக்காரன் பங்களாவைப் பார்த்துட்டுப் பயந்துட்டீங்க ஃபாதர்! இவ்வளவு பெரிய இடத்துக்கு எதிரா நம்மாலே மோத முடியுமான்னு பயந்து பின் வாங்கறீங்க! ஆனா நான் உங்கபேர்லே தப்பு சொல்ல மாட்டேன். இவ்வளவு தூரம்கூட எனக்காக யார் பாடுபடப் போறாங்க? நான் போலீஸுக்குப் போறேன்னு முதல்லேயே சொன்னேனே. நீங்கதான் என் நம்பிக்கையை வளர்த்துட்டீங்க. பரவாயில்லே. இப்பக் கூடப் போலீஸ்கிட்ட என்னை ஒப்படைச்சுடுங்க. இல்லே, நானே போறேன்! ஆனா நான் பாவ மன்னிப்புக் கேட்டபோது உங்ககிட்டச் சொன்னதை யெல்லாம் நம்பறீங்கன்னு மட்டும் சொல்லுங்க. அது போதும், ஃபாதர்!

அரு: .தாமஸ்...

தாம (பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்து): ஃபாதர்! நம்பலேன்னு மட்டும் சொல்லாதீங்க. அதுக்கு முன்னே இதைப் பாருங்க! மாசிலாமணி கொடுத்துட்டுப் போன விபூதிப் பொட்டலம் இது. பாருங்க, ஃபாதர்!

(அருமைநாயகம் வாங்கிப் பார்க்கிறார்)
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

அரு: பரிசுத்தம், கேர் ஆஃப் ஆரோக்கிய சாமி, ...ஆரோக்கியசாமியின் மகன் லெட்டர் ஹெட்டா?

தாம: அப்படித்தான் நினைக்கிறேன். படிச்சுப் பாருங்க.

அரு (படிக்கிறார்): டியர், மிஸஸ் தோ குப்புசாமி, நீங்கள் உங்கள் லேடீஸ் கிளப்புக்காகக் கேட்டிருந்தபடி நன்கொடை தருகிறேன். இன்று மாலை 5–30 மணி சுமாருக்கு என் வீட்டுக்கு வந்து ஐயாயிரம் ரூபாய் பெற்றுக் கொள்ளுங்கள்.

அன்பான பரிசுத்தம்
ஜனவரி 30

தாம: இப்ப என்ன சொல்றீங்க ஃபாதர்? அந்தம்மா அங்கே போனாங்கன்னு தெரியுதா? ஆரோக்கியசாமி சொல்றதும் கட்டுக்கதைன்னு தெரியுதா?

அரு: தாமஸ்! ஆண்டவன் என்னைக் காப்பாத்திட்டான்! உன்மேலே சந்தேகப்படறதா, இல்லே நம்பறதான்னு தெரியாமல் நான் தவிச்சுக்கிட்டிருந்தபோது அது எவ்வளவு பெரிய தவறுன்னு எனக்கு எடுத்துக் காட்ட ஏசுவா கருணை வெச்சு இந்த லெட்டரை என் கைக்கு அனுப்பிட்டான்!

தாம: ஏசுவா? அது கபாலீசுவரர் கோவில் பிரசாதம்னு மாசிலாமணி சார் சொன்னாரே!

அரு: ஏசுவோ ஈசனோ... கடவுள் எனக்குக் கட்டளையிட்டுட்டான், தாமஸ்! உண்மையை நீ கண்டுபிடிச்சு நிரபராதிக்கு விடுதலை வாங்கித்தான் தரணும்னு கடவுள் எனக்குக் கட்டளை யிட்டுட்டான்.

தாம: ஃபாதர்! அந்தப் பையன் எழுதின லெட்டர் அந்தம்மா கிட்டேயிருந்து எங்கே போய் எப்படிங்க கோவிலுக்குப் போச்சு?

அரு: உண்மை தெய்வத்துக்கிட்டே போனது ஆச்சரியமில்லே தாமஸ். அந்தத் தெய்வம் கருணை வெச்சு அந்த உண்மையை என்கிட்டே கொடுத்ததுதான் எனக்கு வியப்பாக இருக்குது.

தாம: ஃபாதர்! இதை வக்கில்கிட்டக் கொடுத்திடுங்க. ரொம்ப உதவியா யிருக்கும்.

அரு: வக்கில்கிட்டக் காட்டறதை விட ஆரோக்கியசாமி கிட்டேயே காட்டி உண்மையைக் கேக்கறேன்.

தாம: ஃபாதர்! அந்த லெட்டரை நான் தான் உங்க கிட்டே கொடுத்திருக்கேன். அது என் சொத்து. அதை வக்கில் கிட்டே ஜாக்கிரதையாச் சேர்ப்பிக்கிறது உங்க பொறுப்பு. அந்தப் பணக்காரனோ வேறு யாராவதோ ஏமாற்றி வாங்கிடப் போறாங்க; ஜாக்கிரதை ஃபாதர்!

அரு: என்னை ஏமாத்தலாம்; ஆனா உண்மையை ஏமாத்த முடியாது! கவலைப்படாதே. உன் மேலே கொஞ்ச நேரம் சந்தேகப்பட்டதுக்காக என்னை மன்னிச்சுடு.

தாம: அப்படிப் பேசாதீங்க ஃபாதர். உங்களுக்கு நான் ரொம்பக் கடமைப் பட்டிருக்கேன். இந்த மாசிலாமணி ஸாருக்கும் நான் ரொம்பக் கடமைப் பட்டிருக்கேன். அவர் இவ்வளவு நல்லவரா இருக்காரே. நீங்க அவரைப் பத்தி என்ன நினைக்கிறீங்க?

அரு: ஏசுவின் இதயம் இந்துக்களிடமும் இருக்குன்னு நினைக்கிறேன்.

தாம: இந்த லெட்டர் ஈசுவரன் கோயில் வழியாத்தானே நமக்குக் கிடைச்சுது? அதைப் பத்தி என்ன நினைக்கிறீங்க?

அரு: ஈசுவரனின் கருணை கிறிஸ்தவர்களுக்கும் உண்டுன்னு நினைக்கிறேன்.

தாமஸ்: இரண்டுமே சொன்னா என்ன அர்த்தம்?

அரு: இரண்டுமே ஒண்ணுன்னு அர்த்தம்! தாமஸ்! காட் இஸ் ஒன். (தொடரும்)

---

# கல்கி மார்ச் 9உ எதிர்காலச் சிறப்பிதழ்



அடுத்த ஆண்டு 360 மில்லியன் கிலோமீட்டர் தூரத்தில் உள்ள செவ்வாய்க் கிரகத்துக்கு அமெ ரிக்கா வைக்கிங் விண்கலத்தை அனுப்பப் போகிறது. இந்த விண் கலம் செவ்வாய்க் கிரகத்தைச் சுற்றிச் சுற்றி வரும்போது அதிலிருந்து ஒரு வாகனம் பிரிந்து சிவப்புக் கிரகத்தில் (செவ்வாய்க்கு மற்றொரு பெயர்) மிருதுவாக இறங்கும். இறங்கும் வாகனத்தில் ஸ்டீரியோ காமிராக்கள், சீதோஷ்ண நிலையை ஆராயும் நிலையம், தானியங்கு முறையில் செயல்படும் மண் ஆராய்ச்சி நிலையம், உயிரினங்கள் உள்ளனவா என ஆராயும் கருவி, சேகரிக்கப்பட்ட தகவல்களைப் பூமிக்கு அனுப்ப ரேடியோ முதலியன இருக்கும். படத்தில் காண்பது 'இறங்கும் வாகனம்'.

# இத்தாலி வழங்கிய இணையற்ற கௌரவம்

மலேஷியா போயிருந்த ஒரு தொழிலதிபர் அங்கு தொழிலகம் நிறுவ என்ன நிபந்தனைகள் என்று அந்நாட்டுப் பிரதமரிடம் கேட்டார். ''ஒரே ஒரு நிபந்தனைதான்; தொழிலகம் லாபகரமாக இயங்க வேண்டும். அப்போதுதானே அரசுக்கு அதில் வரிகள் மூலம் உரிய பங்கு கிடைக்கும்!'' என்றார் துங்கு அப்துல் ரஹ்மான்.

இதைக் கூறியபோது மறுநாள் மலேஷியாவுக்கு ஒரு நூற்பு ஆலை நிறுவுவது சம்பந்தமாகப் புறப்பட்டுக் கொண்டிருந்த திரு ஜி. கே. தேவராஜுலு சிரித்தபடி பேசினார்: ''அந்த ஒரு நிபந்தனையை மட்டும்தான் மலேஷிய சர்க்கார் விதிப்பார்கள் என்று கூறுவதற்கில்லை. ஆனால் அந்த நிபந்தனை முதன்மையானது என்பதுடன் புத்திசாலித்தனமானதும்கூட.''



புத்திசாலித்தனமானதும் முக்கியமானதுமான இந்த விஷயத்தை நமது அரசு புரிந்து கொள்வதே இல்லை. லாபம் பண்ணுகிற தொழிலதிபர்களை எல்லாம் 'பண மூட்டைகள்' என்று வர்ணித்து மக்களிடையே ஓர் அருவை மனப்பான்மையை வளர்த்து வருகின்றனர், ஆளும் கட்சிப் பிரமுகர்கள்.

அரசு புரிந்து கொள்ளாத விஷயம் இது ஒன்று மட்டுமல்ல என்பதை திரு ஜி.கே. தேவராஜுலுவிடம் நான் கேட்ட அடுத்த கேள்விக்கான பதில் நிரூபித்தது.

''இயற்கை நூலிழைகளிலிருந்து தயாராகும் துணியின் விலை அதிகமாக இருக்கிறது என்பதனால்தானே மனிதன் செயற்கை நூலிழைகளை ஆராய்ந்து நாடினான்? அவ்வாறிருக்க இந்தியாவில் இத்தனை விலை விற்பானேன்?'' என்றேன்.

''வரிகள்தாம் காரணம்'' என்றார் ஜி. கே. டி. ''உலகில் வேறு எங்கும் காண முடியாத அளவில் இங்கே செயற்கை நூலிழைகளுக்கு வரிகள் உள்ளன. அதனால்தான் கள்ளக் கடத்தலிலும் நைலான், ரேயான் போன்றவை ஏராளமாய் வருகின்றன. தங்கத்தைக் கள்ளக் கடத்தல் செய்வதை விட இதில் லாபம் மிகுதி!''

பார்க்கப் போனால் மேனாடுகளில் பருத்தித் துணி ஒரு போகப் பொருளாக இன்று கருதப்படுகிறது. உழைப்பு, உற்பத்திச் செலவு எல்லாம் அதிகமானதால் விலையும் அதிகம். மேலும் துவைப்பது, கஞ்சி போட்டு இஸ்திரி போடுவது போன்ற செலவுகள் மிகுதி. செயற்கைத் துணி ரகங்களில் இஸ்திரி போடுகிற தொல்லை இல்லையே!

செயற்கைத் துணியில் இரண்டு ரகம் உண்டு. ஒன்று மரக்கூழிலிருந்து உருவாவது; மற்றது பெட்ரோலியம் சுத்திகரிப்பின் உப பொருள்களிலிருந்து தயாராவது.

திரு தேவராஜுலு அவர்களே செயற்கை நூலிழைகள் தயாரிக்கும் ஒரு நிறுவனத்தின் டைரக்டர்தாம். மரப் பட்டைகளின் கூழிலிருந்து ரேயான் தயாரிக்கும் ஸவுத் இந்தியா விஸ்கோஸ் என்ற நிறுவனம் உருவாகவும் வளர்ச்சி பெறவும் காரணகர்த்தாவாக இருந்தவர். இத்தாலி நாட்டினரின் ஒத்துழைப்புடன் இந்தத் தொழிலகம் அமைந்து முன்னேறியுள்ளது.



'நைட்' பட்டத்துடன் கிடைத்த பதக்கமும் அதைப் பெற்றவரும்.

தொழில் வர்த்தக ரீதியிலும், வேறு பல விதங்களிலும் இத்தாலி நாட்டுடன் கூட்டுறவும் நட்புறவும் வளர உதவியதற்காகத் திரு ஜி.கே. தேவராஜுலு அவர்களுக்கு அண்மையில் இத்தாலிய அரசு 'நைட்' பட்டம் வழங்கியுள்ளது. அந்நாட்டின் மிக உயர்ந்த கௌரவம் இது. ஏற்கனவே இத்தாலி நாட்டின் கௌரவப் பிரதிநிதியாக இங்கு பணியாற்றியுள்ளார் திரு ஜி. கே. டி.

''ரேயான் உற்பத்திக்குத் தேவைப்படும் மரங்களைப் பயிராக்குவதில் நமது அரசு இன்னும் அதிகக் கவனம் செலுத்த வேண்டும்'' என்றார் ஜி. கே. தேவராஜுலு. ''எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்னால் நீலகிரி மலைகளில் பிரிட்டிஷ்காரர்கள் முன்யோசனையுடன் நட்டுவிட்டுப் போன மரங்களே இன்னும் பயனாகின்றன. இது போதாது. மூலப் பொருள் இறக்குமதி செய்ய நேர்வதே இத்துறையின் வளர்ச்சிக்குத் தடையாக இருக்கும் பெரும் பிரச்னை. அந்த நாளில் இரண்டாயிரத்து முந்நூறு அடி உயரத்துக்கு மேல் மலைப் பிரதேசங்களில் வளரும் மரங்களிலிருந்துதான் நல்ல கூழ் தயாரிக்க முடியும் என்று கருதினார்கள். ஆனால் இப்போதெல்லாம் கடல் மட்-

டத்தில் பயிராகும் மரங்களைக் கூடத் திறம்படப் பயன்படுத்திக் கொள்ள வழி கண்டுபிடித்திருக்கிறார்கள்.''

செயற்கை நூல் இழைகள் சார்பில் ஜி. ஆர். டி. பேசுவதால் அவர் இயற்கை நூலுக்கு விரோதி அல்ல. ''பட்டுக்கு நிகர் பட்டுத்தான்'' என்று கூறும் அவர் லக்ஷ்மி மில்ஸ் நிறுவனங்களின் தலைவராக மட்டுமின்றிப் பருத்தி ஆலைகள் சம்மேளனத்தின் தலைவராகவே விளங்கியவர்தாம். அதே சமயம் செயற்கை நூல் இழைகள் உபயோகிப்போர் சங்கத்துக்கும் தலைவராகப் பதவி வகித்திருக்கிறார். தமக்குக் கீழே இரு துறைகளிலும் பணியாற்றுவோர் ஒருவரோடொருவர் கருத்து வேற்றுமையுடன் மோதிக் கொள்ளும் போது இரு துறைகளும் ஒன்றுக்கொன்று அனுசரணையாகவும் பக்கபலமாகவும் இருக்க வேண்டியவை என எடுத்துக் கூறுவார். இன்றும் அதையே சொல்கிறார்.

திரு ஜி. கே. தேவராஜுலு பார்த்தால் பசு, பாய்ந்தால் புலி! அடக்கத்துடன் விளங்கி அன்புடன் பேசி அமைதியாகத் தோன்றுகிறவர், சாதனைகளில், செய்நேர்த்தியில் புலி. ஓர் உதாரணம் பார்ப்போம். இவர் லக்ஷ்மி மிஷின் ஒர்க்ஸ் நிறுவனத்தின் தலைவர். இந்த நிறுவனம் நூற்பு நெசவு ஆலைகளுக்குத் தேவையான இயந்திரங்களைத் தயாரிப்பது. இதன் உற்பத்தியில் இருபது சத விகிதம் ஏற்றுமதியாகிறது; எண்பது சதம் உள்நாட்டுத் தேவைகளைப் பூர்த்தி செய்கிறது. இந்த நிறுவனம் தொடங்க ஒத்துழைத்தவர்கள் ஸ்விஸ் நாட்டவர். இந்த ஸ்விஸ் ஸ்தாபனம் பெல்ஜியம் நாட்டில் ஓர் ஆர்டர் பிடித்திருந்தது. ஆனால் பல்வேறு காரணங்களால் சமயத்துக்கு ஏற்றுமதி செய்ய முடியவில்லை. கால தாமதத்தைத் தவிர்க்க விரும்பிய அவர்கள் என்ன செய்தார்கள் தெரியுமா? அந்த ஆர்டரைப் பூர்த்தி செய்யுமாறு லக்ஷ்மி மிஷின் ஒர்க்ஸைக் கேட்டுக் கொண்டார்கள். அந்த இயந்திரங்களைப் பெல்ஜியத்துக்குத் தங்கள் சார்பில் ஏற்றுமதி செய்யச் சொன்னார்கள்! அதாவது ஸ்விஸ் இயந்திரங்களுக்குச் சிறிதும் தரத்தில் குறைந்தது அல்ல, கோவையில் தயாராகும் நெசவாலை இயந்திரங்கள் என்பதைத் தாய் ஸ்தாபனம் முழு மனத்துடன் ஒப்புக் கொண்டது; பெல்ஜியமும் ஏற்றது.

ஜி. கே. தேவராஜுலு அவர்களின் ஆற்றலுக்கு இன்னும் என்ன சான்று வேண்டும்? — **வி. ராஜேந்திரன்**

# படித்துப் பாருங்கள்

## தெய்வமாக் கவி

அப்பழுக்கற்ற கலைப் பாங்கோடும் அமானுஷ்யமான சத்திய வேட்கையோடும் கம்பன் படைத்திட்ட காவியத்தை ''தெய்வமாக்கவி'' எனத் தாம் போற்றக் காரணம் என்ன என்பதைத் தலைப்புக் கட்டுரையில் தமது அனுபவத்திலிருந்து திரு மகராஜன் தெரிவிக்கிறார். இரண்டாவது கட்டுரை, ''மானுடத்தின் வெற்றி''. அதிலே ஆசிரியர் ''மனித ஆன்மா எவ்வளவு மாண்புடையதாய் இருக்கிறது! மனிதனுடைய ஆற்றல் எப்படிக் கங்கு கரையற்று இயங்குகிறது!'' என்று கூறி அவை வியப்பையும் நன்னம்பிக்கையையும் ஊட்டுவதை எடுத்துச் சொல்கிறார். அடுத்த மூன்று கட்டுரைகள், திருக்குறளைப் பற்றியவை. இவற்றில் முதலாவது, ஒரு ஜெர்மன் தத்துவ ஞானி எந்த நோக்குடன் குறளைக் கண்டார் என்பதைக் காட்டுகிறது; மற்ற இரண்டும் குறளிலே மகராஜன் கண்ட அற்புதமான சொல்லாட்சியையும் நாடக உத்தியையும் காட்டுகின்றன.

மற்றும் உள்ள பதினேழு கட்டுரைகளிலும் திரும்பத் திரும்ப வருவது தெவிட்டாத கவி அனுபவமே. அண்மைக் காலக் கவிஞர்களில் பாரதியாரும் தேசிகவிநாயகம் பிள்ளையும் ஆசிரியரின் ரசிக வட்டத்தில் உலவுகிறார்கள். மேனாட்டுக் கவிஞர் ஷேக்ஸ்பியரும் அந்த வட்டத்தில் இடம் பெறுகிறார். கவிதா ரசிகர்களிலே இணையில்லா மணியாய் விளங்கிய டி. கே. சி. பல கட்டுரைகளில் நேர்முகமாயும் மறைமுகமாயும் உலவுகிறார். அந்த ரசிகமணிதான் ஆங்கிலக் கவி உலகில் சுற்றிக் கொண்டிருந்த மகராஜனைத் தமிழ்க் கவி உலகிலும் சுற்றச் செய்தவர்; அத்துடன் எவ்விதக் கவிதையை எவ்விதமாய் அனுபவிக்க வேண்டும் என்று வழிகாட்டியவர். மகராஜன் சொல்கிறார்:

''கலையை அனுபவிப்பதற்குப் படிப்பு இருந்தால் போதாது. உள்ளுணர்வு வேண்டும். உள்ளுணர்வோடு பணிவும் பவ்வியமும் வேண்டும். கலை உலகத்துக்குள்ளே நுழைய வேண்டுமென்றால் காலிலே போட்டிருக்கும் செருப்பைக் கழற்றி வைத்துவிட்டு, 'நான்' என்ற திமிரைக் கொஞ்சம் பம்ம வைத்துக் கொண்டு, மேல் வேட்டியை அரையிலே கட்டிக் கொண்டு, வாலிருந்தால் வாலைச் சுருட்டி வைத்துக் கொண்டு, அதன் பின் தான் கலை வாசலுக்குள் அடி வைக்கலாம்; இல்லையேல் கலையுலகம் வழி திறவாது.

''இப்படியெல்லாம் நோன்பு இருந்து, உள்ளத்தைப் பக்குவப் படுத்திக்கொண்டு, கலையுலகத்திற்குள் புகுவோமேயானால், ஆணவமற்ற ஆனந்த நிலை நமக்குக் கிட்டும். இந்த அரிய உண்மையை நேரடியாக எடுத்துக் காட்டினார்கள் ரசிகமணி டி.கே.சி.''

ஆங்கிலத்தின் மூலம் தமிழையும், தமிழின் மூலம் ஆங்கிலத்தையும் மேலும் மேலும் சீராகவும் செம்மையாகவும் ரசிக்கவும் மதிப்பிடவும் பழகியவர் மகராஜன். ஃபிரெஞ்சு மொழியைப் பயின்று அதன் மூலமும் இலக்கிய ரசிகத் தன்மையை நேர்த்தியாக்கிக் கொண்டவர்.

டி.கே.சி. எப்படித் தமது வட்டத் தொட்டியில் கவி இன்பத்தை ரசிகர்களுக்குப் பகிர்ந்தளித்தாரோ, அதேபோல் மகராஜனும் இந்த நூலின் மூலம் இலக்கிய ரசனையை நமது இதயங்களில் வளர்க்கிறார். — **கந்தர்**

வெளியிட்டோர்: பழனியப்பா பிரதர்ஸ், சென்னை - 14. விலை ரூ. 7.

# தலைவர் தரிசனம்-5

# ஜனாப். டி. அப்துல் பாஷித் சாகிப்



பாரதம் பிளவுபடாமல் ஒன்றாக இருந்த நாளில் ஜனாப் ஜின்னா சாகிப், முஸ்லிம் லீக் கமிட்டி உறுப்பினர்களாகப் பதினொரு நபர்களை நியமித்தார். அவர்களில் இன்று நம்மிடையே வாழ்ந்து வருபவர்கள் இருவர். அவர்களில் ஒருவர், சேலம் பெரியார் என்று மரியாதையுடன் குறிப்பிடப்படும் ஜனாப் அப்துல் பாஷித் சாகிப். எளிய வாழ்க்கையையே குறிக்கோளாகக் கொண்டு எழுபதாவது வயதை நெருங்கிக் கொண்டிருப்பவர். தென்னிந்திய முஸ்லிம் லீகின் இன்றையத் தலைவர். 'முதல் வகுப்பு ரயில் பெட்டியை நான் இன்னும் தொட்டுக் கூடப் பார்த்ததில்லை' என்று சொல்லிக் கொள்ளும் அளவுக்கு எளியவர்.

1958ல் திருச்சியில் தமிழ்நாட்டு அளவில் முஸ்லிம் லீக் ஊழியர்களின் மகாநாடு ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கப் பல பிரமுகர்கள் தயங்கியபோது அப்துல் பாஷித் அவர்கள் ஒப்புக்கொண்டு முன்வந்தார்கள். அந்த மகாநாட்டில் கலந்துகொண்ட ஊழியன் என்ற வகையில் அவருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு முதன் முதலாக எனக்குக் கிட்டியது. சுமார் ஆயிரம் ஊழியர்கள்தான் கலந்து கொள்வார்கள் என்று எதிர்பார்க்கப்பட்ட அந்த மகாநாட்டில் பதினையாயிரத்துக்கு மேற்பட்ட அன்பர்கள் கலந்து கொண்டார்கள்.

மகாநாடு முடிவடையும் வேளையில் அப்துல் பாஷித் அவர்களின் உடல் நலம் சற்றுப் பாதிக்கப்பட்டதால், அந்த நேரத்தில், திருப்பூர் மொகிதீன் அவர்கள் யோசனையின் பேரில் இஸ்மாயில் சாகிப் தொடர்ந்து பணியாற்றத் தலைமைப் பதவியை ஏற்றுக் கொண்டார். பாஷித் அவர்களிடம் உபதலைவர் பதவி ஒப்படைக்கப்பட்டது. ஐந்து உபதலைவர்களில் ஒருவராகப் பணியாற்ற முன்வந்தார். 1961ம் ஆண்டில் முறையான தேர்தல் நடந்தபோதும் அவர் உபதலைவராகவே இருக்கத்தான் சம்மதித்தார்.



நான் பொக்கிஷதாரராகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன்.

பாஷித் சாகிப் சுயநலத்தை என்றும் நினைத்துப் பார்க்காத ஒரு சமூக சேவகர். இருபத்தி ஏழு ஆண்டுகளாகச் சேலம் நகரசபை உறுப்பினராகப் பணியாற்றியவர். தெரிந்தவர், தெரியாதவர் என்ற வித்தியாசமில்லாமல், யாருக்கும் உதவ முன்வரும் சுபாவம். சேலம் நகர முஸ்லிம் சமுதாயத்தில் அவர் இல்லாத முக்கிய நிகழ்ச்சி ஏதும் நடக்காது.

1968ம் ஆண்டுவரை தமிழ்நாடு முஸ்லிம் லீக் என்ற தனிக் கட்சி தோன்றவில்லை. இஸ்மாயில் சாகிப் தலைமையின்கீழ் ஒரே ஸ்தாபனமாக யூனியன் முஸ்லிம் லீக்தான் இயங்கி வந்தது. அந்த ஆண்டில் அபிப்பிராய பேதங்களைத் தோற்றுவிக்கக் கூடிய சில நிகழ்ச்சிகள் துரதிர்ஷ்டவசமாக நிகழ்ந்தன. நாற்பத்தி ஐந்து பேர்கள் கொண்ட லீக் கமிட்டி உறுப்பினர்களிடையே, ராஜ்ய சபைக்கும், தமிழ் நாட்டு மேலவைக்கும் யாரைத் தேர்ந்தெடுப்பது என்ற விஷயத்தில் கட்சியின் பிளவுக்கு வித்திடப்பட்டது. சில உறுப்பினர்கள் கட்சியிலிருந்து தாற்காலிக நீக்கம் செய்யப்பட்டார்கள். நீக்கப்பட்டவர்களில் நானும் ஒருவன். பாஷித் சாகிப் இந்தச் சிக்கலில் மாட்டிக் கொள்ளவில்லை.

**சொல்பவர்:**

**ஹாஜி. டி. ஏ. எஸ். அப்துல் காதர்.**

**சூரன்!**



"போன வாரம் சர்க்கஸில் நடந்த நிகழ்ச்சியினால் இவர் ரொம்பப் பிரபலமாகி விட்டார்!"

"எந்த விதத்தில்?"

"பெரிய சிங்கம் ஒன்று கூண்டிலிருந்து தப்பி விட்டது. பார்க்க வந்த கூட்டத்தினர் பயந்து அலறி, வெளியே ஓடுவதற்கு யத்தனித்தபோது இவர் நிதானமாக அந்தச் சிங்கக் கூண்டுக்குள் நுழைந்து உட்பக்கம் தாளிட்டுக் கொண்டார்!"

மிர்ரர்—பாமாப்ரியா

---

ஆனாலும் அவர் இந்தத் தடையை நீக்கவும் கட்சியில் சுமுகமான உறவை நீடிக்கச் செய்யவும், நல்ல எண்ணத்துடன் இஸ்மாயில் சாகிப்பிடம் தூது போனார். வாதாடினார். ஆனால் அவருக்கு வெற்றி கிட்டவில்லை. பிளவு உணர்ச்சி வளர்ந்தது. இதற்காக பாஷித் சாகிப் சென்னையில் பதினைந்து நாட்கள் தங்கிப் பாடுபட்டார்.

கடைசியில் அவர் முயற்சிக்குக் கிடைத்த பதில் இதுதான்: "நியாயம் அவர்கள் பக்கம் இருக்கும் என்று நீங்கள் நினைத்தால் நீங்களும் அவர்கள் பக்கம் போகலாம்"

வேறு வழியில்லாத நிலையில், தாற்காலிக நீக்கம் செய்யப்பட்ட ஐந்து நபர்களுக்கும் ஆதரவு காட்டும் வகையில், ராமநாதபுரம், திருச்சி, சேலம் மாவட்டங்களிலுள்ள தொண்டர்கள் தங்கள் ராஜிநாமாவைத் தலைமைப் பீடத்துக்கு அனுப்பிவைத்தார்கள். அவர்களில் எழுநூறு பேருக்கு மேலாகவே 1969ல் சேலத்தில் கூடி நிலைமையை விவாதித்தார்கள். புதிய கட்சிக்குப் பெயர் சூட்டவும், அங்கேயே ஒரு குழு நியமிக்கப்பட்டது. பழைய கட்சியிலிருந்து நீக்கப்படாத அன்பர் ஒருவர்தான் 'தமிழ்நாடு முஸ்லிம் லீக்' என்ற பெயரைத் தேர்ந்தெடுக்கலாம் என்று யோசனை கூறினார். அந்தப் பெயரைத் தொண்டர்களும் ஏற்றுக் கொண்டார்கள். சீக்கிரமே பாஷித் சாகிப் இந்தக் கட்சிக்குத் தலைவராக்கப்பட்டார்.

1965ம் ஆண்டில் நானும் இஸ்மாயில் சாகிப்பும் புனித ஹஜ் யாத்திரையை மேற்கொண்டோம். பாஷித் சாகிப் இன்னும் ஹஜ் யாத்திரையைச் செய்யவில்லை. அவருக்கு அதில் நிறைய ஆர்வம் உண்டு. ஆனால் அதற்குஅவரிடம் பொருளாதார வசதியில்லை.

இந்த ஹஜ் யாத்திரையை மேற்கொள்ள முஸ்லிம் மார்க்கத்தில் பல நிபந்தனைகள் உண்டு. கடன் வாங்கிக் கொண்டு மெக்காவுக்குப் போனால் அந்த யாத்திரையின் பலன் கிட்டாது. பிறர் தயவிலோ உதவி கொண்டோ போகவும் கூடாது. ஏன், உடலில் வலிமை இருக்கும்போது, சொந்த மகன், தன் வருமானத்தில் அழைத்தால் கூட அதை ஏற்றுக் கொள்வதில் பயன் இல்லை. இனி மேல் தன்னால் சம்பாத்தியம் செய்ய முடியாது என்ற தள்ளாத நிலை வந்த பிறகுதான் மகன் தயவில் போகலாம்.

ஆண்டுதோறும் இந்திய சர்க்கார் அதன் செலவில் இரண்டு முஸ்லிம்களை இந்த யாத்திரைக்குத் தேர்ந்தெடுத்து அனுப்பி வைக்கிறது. இந்த அழைப்பு பாஷித் சாகிபுக்கு வந்தது. ஆனால் அவர் அந்த அழைப்பை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டார். இல்லாம் மார்க்கத்தின் கொள்கைப்படி இந்த ரக யாத்திரை அவருக்குப் பலனை அளிக்காதே!

இன்றும் அவர் சேலம் மார்க்கெட் பகுதியில் சிறிய அளவில் ஓர் எண்ணெய்க் கடை நடத்தும் சாமானிய மனிதர்! மகாநாட்டுக்கோ கமிட்டி கூட்டத்துக்கோ வருவதானால் அவர் சாதாரணமாக பஸ்ஸிலோ, அல்லது பலர் சேர்ந்து அமர்த்திக்கொண்டு வரும் டூரிஸ்ட் பஸ்ஸிலோதான் வருவார். எங்கு வந்தாலும் அவர் தங்குமிடம் பள்ளி வாசல்தான். அல்லது 'மதரசா'வில் தங்குவார். ஹோட்டல், லாட்ஜ் இவைகளெல்லாம் அவருக்குத் தெரியாத விஷயங்கள்.

எந்தச் சூழ்நிலையிலும் எங்கிருந்தாலும், தினம் ஐந்து வேளை தொழுகை நடத்திவிடுவார். எந்த நோன்பையும் கடைப்பிடிக்காமல் விட்டதில்லை.

யூனியன் லீக் கட்சியில் அபிப்பிராய பேதம் தோன்றிய ஆரம்பத்தில் எனக்குத் திருச்சி தாயத் நகரில் ஒரு வரவேற்புக்கு ஏற்பாடாகியிருந்தது. அந்த வரவேற்பு நிகழ்ச்சிக்கு பாஷித் சாகிப் அவர்களும், கட்சி ஒருமைப்பாட்டுக்காகச் சமாதான தூது போனவர் என்ற காரணத்துக்காக அழைக்கப்பட்டிருந்தார். அப்போது அவர் யூனியன் லீக் சார்பாகத்தான் இருந்தார்.

அப்போதுதான் எனக்கு அவரைப் பற்றி ஒரு முக்கிய விஷயம் தெரிய வந்தது. எனக்கு மாலை போட்டார்கள். மேடையில் அமர்ந்திருந்த அவருக்கு மாலை ஏதும் போடப்படவில்லை. காரணத்தை மெதுவாக விசாரித்தேன். எந்தக் கூட்டத்துக்கு வந்தாலும் தமக்கு மாலை போடக் கூடாது என்ற நிபந்தனையுடன்தான் வருவாராம். அந்தக்கொள்கையை இன்னும் கடைப்பிடிக்கிறார்.

பொதுவாக ஏதாவது கட்சி விஷயங்கள் பற்றி அவரிடம் கலந்து ஆலோசிக்க வேண்டுமென்றால், எங்களில் யாராவது, செயலாளரோ, பொருளாளரோ அவரைச் சேலத்தில் போய்ச் சந்தித்து விடுவோம். அவரை இங்கு வரச் சொன்னால் அவர் தம் சொந்தச் செலவில்தான் வந்து போவேன் என்று வற்புறுத்துவார். அந்த வகையில் அவருக்குக் கஷ்டத்தைக் கொடுக்க நாங்கள் விரும்புவதில்லை.

சமூக சேவகர், எளிய மனிதர், தூய நோக்கங்கள் கொண்டவர், மனிதாபிமானம் நிறைந்தவர், ஆடம்பரம் அறியாதவர், சேலம் பெரியார் ஜனாப் அப்துல் பாஷித் சாகிப்.

கேட்டு எழுதியவர்: **கோமதிஸ்வாமிநாதன்**

# ரேஸர் வெட்டும் ரோமக் கட்டையும் ஏற்படும்போது வெட்கப்படுங்கள்... அல்லது



# ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர் தரும் பட்டு மேனியால் பெருமைப்படுங்கள்

ஷேவிங் வேண்டாம். அது ஆண்களுக்கு மட்டுமே! தவிர, உங்கள் சருமத்தை வெட்டி வதைக்கும்...,ரோமம் கட்டையாக வளரும். இதோ ஒரு விடிவு-பெண்மைக்கே உரிய நளினமான வழியில் வேண்டாத ரோமத்தை விரட்டியடிக்கலாம்.மென்மையான ஆன் பிரஞ்ச் ஹேர் ரிமூவர்-இந்த க்ரீமை வேண்டாத ரோமத்தின் மீது தடவுங்கள். சிறிது நேரம் கழித்துத் துடைத்து எடுங்கள். ஆஹா! உங்கள் மென்பட்டு மேனி கண்டால் கண்பட்டு விடாதோ! இந்த க்ரீம் சருமத்தின் உட்சென்று வேலை செய்து வேண்டாத ரோமத்தை வழியனுப்புகிறது...வாரக்கணக்கில் பட்டுப் போல் மென்மை—தொட்டுப் பார்த்தால் மழமழப்பு...பெண்மையின் நளினத்தைப் பேசுகிறது உங்கள் மேனி-இல்லையா? எனவே இக்கணமே ரேஸருக்கு வழியனுப்பு: ஆன் பிரஞ்ச் ஹேர் ரிமூவருக்கு வரவேற்பு!



## ஆன் பிரெஞ்ச்

### ஹேர் ரிமூவர்

அருவருப்பூட்டும் ரோமத்தை அகற்றும் அருமையான க்ரீம்




2 சைஸ்களில் கிடைக்கிறது : 40 கிம் மற்றும் 75 கிம்.

Licensed User of TM : Geoffery Manners &Co. Ltd.

126 HR-182 Tam

## காது கேட்பது கஷ்டமா?

**DANAVOX**




எல்லாவித செவிட்டுத்
தன்மைக்கும் ஏற்ற
ஹியரிங் எய்ட்
சாதனம் எம்மிடம்
இருக்கிறது.

எல்லா ஹியரிங் எய்ட்
சாதனங்களுக்கும் சர்வீஸ்
செய்வதுடன், அவற்றுக்கான
உதிரி உறுப்புகளையும்
வைத்திருக்கிறோம்.

விநியோகஸ்தர்கள்:
**ஸிங் டிரேடிங் கம்பெனி,**
9, பிளாக்கர்ஸ் ரோடு,
சென்னை-2. போன்: 85904.

---

## மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான
**ஹெடன்ஸா**
களிம்பு
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

Bensons-2141 TAM

---

# If you are learning or teaching Russian then read...

РУССКИЙ ЯЗЫК ДЛЯ ВСЕХ РУССКИЙ ЯЗЫК ДЛЯ ВСЕХ

# RUSSIAN FOR EVERYBODY

**SUBSCRIPTION RATES**

| | |
|---|---|
| Single Copy | Rs. 1.25 |
| Annual | Rs. 14.00 |
| Three Years | Rs. 25.00 |

PLEASE SEND SUBSCRIPTION DIRECTLY BY M.O., CROSSED POSTAL ORDER OR CROSSED BANK DRAFT MADE IN FAVOUR OF :

**Soviet Land Office,**
25, Barakhamba Road, New Delhi-110001.

- ★ **RUSSIAN FOR EVERYBODY** provides students of the Russian language with a variety of teaching aids, both for beginners and for advanced-level students.
- ★ **RUSSIAN FOR EVERYBODY** provides gramophone records to help the students to master the Russian sound system, accent and intonation.
- ★ **RUSSIAN FOR EVERYBODY** contains special features on "Let's Speak Russian," "Russian Speech Habits," "For You," "Quick-witted" etc.
- ★ **RUSSIAN FOR EVERYBODY** portrays the life of the people of the Soviet Union.
- ★ **RUSSIAN FOR EVERYBODY** constitutes a standard textbook for teachers of Russian
- ★ SUBSCRIBE 'RUSSIAN FOR EVERYBODY FOR THREE YEARS FOR A COMPLETE COURSE IN RUSSIAN...AT A LESS RATE TOO !

# சத்திய மங்கலம்: காணும் சுப மங்களம் —

எஸ்.வி.எஸ்

★ மும்மூர்த்திகள்—ராமு - ராகவன் - வேங்கடராமன்

★ பூச்சி ஒழிப்பு மருந்து தெளிக்கும் கருவியுடன்

★ தனித்தனி பாலிஸி எடுத்த விவசாய தம்பதிகள்

இந்த இருபதாம் நூற்றாண்டில் அமெரிக்காவில் ஏகலைவன் வாழ்ந்து, துரோணருக்குக் கட்டை விரல் வெட்டிக் கொடுத்திருந்தாளுனால், அதனால் அவனுக்கு ஏற்பட்ட நஷ்டத்தை இன்ஷூரன்ஸ் கம்பெனி ஈடு செய்திருக்கும். அவன் வாழ்நாள் முழுதும் கவலையில்லாமல் வாழக்கூடிய அளவுக்குப் பெருந்தொகையை நஷ்டஈடாகத் தந்திருக்கும். ஆம், அங்கு எதையும் இன்ஷூர் செய்யலாம். ஆனால் நம் நாட்டின் மிக முக்கியமான தொழிலான விவசாயத்துக்கு இன்று வரை இன்ஷூரன்ஸ் பாதுகாப்பு இல்லை. கோடிக் கணக்கான மக்கள் ஈடுபட்டுள்ள ஒரு தொழிலுக்கு இந்தப் பாதுகாப்பு அவசியம் அளிக்கப்பட வேண்டும் என்பதால் இப்போதுதான் ஒரு தொடக்கம் ஏற்பட்டிருக்கிறது.

விவசாயத்தில் உள்ள கஷ்டங்களைச் சொல்லி மாளாது என்றால் நஷ்டங்கள் அவற்றைவிட மோசம். அறுவடை செய்தால் நாலு காசு காணலாம் என்று விவசாயி பாற்கனவு கண்டு கொண்டிருப்பான். அப்போது திடீர் என்று மழை பெய்து பெருவெள்ளம் வந்து, அவன் பயிரையெல்லாம் அழித்து விட்டுப் போய்விடும்.

பயிர் சாவியாகிவிட்டால் அரசு விவசாயிகளுக்கு இரங்கிக் கிஸ்தி கட்ட வேண்டாம் என்று கூறலாம். ஆனால் இது எந்த மூலை? ஒவ்வொரு விவசாயியும் எவ்வளவு செலவு செய்திருப்பான்? எவ்வளவு கடன் வாங்கி இருப்பான்! இந்த நஷ்டத்தை யார் ஈடு செய்வார்கள்? இதை எண்ணித்தான் விவசாயக் குடிமக்களின் நலவரான ஆசார்ய ரங்கா "விவசாய இன்ஷூரன்ஸ் தேவை; உடனடியாக அமுல்படுத்த வேண்டும்" என்று பல்லாண்டுகளாகக் கூறி வருகிறார்.

தமிழ் நாட்டில் கோவை மாவட்டம் சத்தியமங்கலத்தில் பருத்திச் சாகுபடி விவசாயத்தில் சென்ற ஆண்டு இன்ஷூரன்ஸ் திட்டம் அமுல்படுத்தத் தொடங்கி இருப்பது மிகவும் வரவேற்கத் தகுந்த விஷயமாகும். இங்கு இ. ஐ. டி. பாரி கம்பெனியும், ஸ்டேட் பாங்கும் சில பொறுப்புக்கள் ஏற்றுக் கொண்டதால் ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷனின் ஜெனரல் இன்ஷூரன்ஸ் பிரிவு விவசாய இன்ஷூரன்ஸ் செய்ய முன் வந்திருக்கிறது. சத்திய மங்கலம் பகுதியில் பருத்தி சாகுபடி செய்யும் விவசாயிகளுக்கு இன்ஷூரன்ஸ் திட்டம் அமுல்படுத்தப்பட்டிருக்கிறது.




'எண்பதாம் நெம்பர் நூல் தயாரிக்கக் கூடிய பஞ்சையளிக்கும், எம். ஸி. யூ—5 வகை பருத்தியை ஓர் ஏக்கர் நிலத்தில் சாகுபடி செய்தால் சுமார் ஏழு குவிண்டால் பருத்தி கிடைக்குமாம். ஒரு குவிண்டால் பருத்தியின் விலை சுமார் ரூ. 500. ஆகவே ஓர் ஏக்கருக்குச் சுமார் ரூ. 3500 வரை கிடைக்கும். நல்ல வருமானம்தான்.

ஆனால் பருத்திச் சாகுபடி போல் தொல்லையானது ஒன்று கிடையாது. அதைத் தாக்கும் நோய்களுக்குக் கணக்கில்லை. ஆகவே, மிகவும் கருத்தாயிருந்து அவ்வப்போது பூச்சி மருந்து தெளித்து வராவிட்டால் படு நஷ்டம் ஏற்பட்டுவிடும். தகுந்த உரமும் அவ்வப்போது இட்டு வர வேண்டும்.

இவ்வளவு தொல்லை மிகுந்த பருத்தி விவசாயத் துறையில் பாரி—ஸ்டேட். பாங்கு—ஜெனரல் இன்ஷூரன்ஸ் நுழைந்திருக்கிறது.

இ. ஐ. டி. பாரி கம்பெனியார் 1906ம் ஆண்டிலேயே ரசாயன உர உற்பத்திக்கு ஒரு தொழிற்சாலை ஏற்படுத்தினார்கள். இந்நிறுவனத்தினர் பல வகை ரஸாயனக் கலவை உரங்கள் உற்பத்தி செய்கிறார்கள். இவை தவிர மெட்ராஸ் பெர்டிலைஸர்ஸ், கோரமாண்டல் பெர்டிலைஸர்ஸ் ஆகிய நிறுவனங்கள் தயாரிக்கும் யூரியா போன்ற உரங்களை விற்கும் உரிமையையும் பாரி கம்பெனி பெற்றிருக்கிறது. ஒவ்வொரு வயலும் எந்த எந்த உரம் ஏற்கத் தகுதியானது என்பதை மண் வள ஆராய்ச்சி மூலம் நிர்ணயிக்க வேண்டும். இ.ஐ.டி. பாரி நிறுவனம் இதைச் செய்துஅளிக்கிறது. அது மட்டுமா? பயிருக்கு ஏற்ற கலவை உரம், 'பம்ப்செட்', அதை







குருஷ்சேவ் கூறியது:

ஆறே இல்லாத ஊருக்குப் பாலம் கட்டித் தருவதாக வாக்குறுதி அளித்து ஓட்டு வாங்கு பவன்தான் அரசியல்வாதி! — மிர்ரர்



அற்பாயுசு

இந்தியாவில படப் பிடிப்புக்கு எடுத்துக் கொள்ளப்படும் சினிமாக்களில் நாலுக்கு மூன்று பாதியிலேயே நின்றுவிடுகின்றன.

இல்லஸ்டிரேட்டட் வீக்லி



குரங்கை நோக்கி....!

குரங்கிலிருந்து மனிதன் வந்ததாகச் சொல் கிறார்கள். ஆனால் உலகம் போகும் போக்கைப் பார்த்தால் மனிதன் குரங்கிலிருந்து வந்தானா அல்லது குரங்கை நோக்கிப் போகின்றானா என்று புரியவில்லை! - மிர்ரர்

## பஞ்சாபிப் பழமொழி

எந்த ஒரு மனிதனுக்கும் தன்னுடைய அறிவும் பிறனுடைய செல்வமும் உள்ளதைவிட அதிகமாகவே தோன்றும்.

ஸ்டேட்ஸ்மன்-பாலி

இயக்க ஆயில் இன்ஜின்கள், பூச்சி மருந்துகள், அதைத் தெளிக்க ஸ்பிரேயிங் மெஷின்கள் என்று இப்படி விவசாயத்துக்குத் தேவையான எத்தனையோ பல பொருள்களைப் பாரி கம் பெனியார் உற்பத்தி செய்கின்றனர். விவ சாய இன்ஷூரன்ஸ் திட்டத்தில் சேர்ந்தவர் களுக்கு இவை எல்லாமே ஒரே கூரையின் கீழ் சத்தியமங்கலத்தில் பாரி கம்பெனி கிளை அலுவலகத்தில் கிடைத்து விடும். இது போதாதென்று விவசாயத் துறையில் பட்டப் படிப்புப் பெற்ற உத்தியோகஸ்தர்களை நிய மித்திருக்கிறார்கள். இவர்கள் இந்த விவ சாயிகளுக்கு நல்ல ஆலோசனைகளை அவ்வப் போது கூறி உதவுகிறார்கள்.

அது சரி, இதை யெல்லாம் சும்மாவா கொடுத்துவிடப் போகிறார்கள்? பணத்தைக் கழற்றித்தானே ஆக வேண்டும் என்று வினவ லாம். ஆனால் இன்ஷூரன்ஸ் திட்டத்தில் சேர்ந்தால் எம். ஸி. யு.—5 வகை பருத்திச் சாகுபடிக்கு வேண்டிய அத்தனை பொருட் களுக்கும் சத்தியமங்கலத்தில் உள்ள ஸ்டேட் பாங்கு பணம் கொடுத்துவிடுகிறது. பாரி கம்பெனிக்கு. அந்தப் பொருட்கள் தேவை தானா? நல்லபடியாக உபயோகப்படுத்தப்படு கின்றனவா என்று ஸ்டேட் பாங்கு அதிகாரி களும் மேற்பார்வையிடுகிறார்கள்; யோசனை களும் சொல்வார்கள். இ. ஐ. டி. பாரி கம்பெனியார், விளைந்த பருத்தியை வாங்க வும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். தமிழக அரசின் திருப்பூர் பண்ணை நல்ல விதைகளை விற்கிறது.

ஆக, ஓர் ஏக்கர் உள்ள விவசாயி 45 ரூபாய் பிரீமியம் கொடுத்து ஒரு பாலிஸி எடுத்துக் கொண்டால் நல்ல விவசாய உதவியுடன், பாதுகாப்பும் கிடைத்து விடுகிறது. இவர் அளிக்கும் உழைப்பு, சாணி உரம் ஆகியவற் றுக்கு மதிப்புப் போட்டால் 620 ரூபாய் ஆகலாம். மருந்து வகைக்கு 880 ரூபாய் ஆகிறது. பிரீமியம் தொகை 45 ஆக எல்லாம் சேர்த்து 1545 ரூபாய் செலவாகிறது.

இந்த ஓர் ஏக்கர் நிலத்தில் இப்படிச் சாகுபடி செய்தால் 3500 ரூபாய் முதல் 4000 ரூபாய் வரை கிடைக்கலாம். 1545 ரூபாய் செலவு போகச் சுமார் 2000 ரூபாய் வரையில் விவசாயிக்கு மிச்சம் நிற்கக் கூடும்.

ஒருவேளை ஏதோ காரணத்தினால் சரியாக விளையாமல் முழுதும் நஷ்டமானால் ஸ்டேட் பாங்கியில் வாங்கிய கடன் விவசாயி தலையில் விழாது! விவசாயி 45 ரூபாய் செலுத்தி இன்ஷூரன்ஸ் செய்து கொண்டதன் பலனாக, அவன் ஸ்டேட் பாங்குக்குப் பட்ட கடனையும், தானளித்த உழைப்பு முதலியவற்றுக்காகவும் 1545 ரூபாயை ஜெனரல் இன்ஷூரன்ஸ் அளித்து இட்டு நிரப்பிவிடும். விவசாயி கட னாளியாக நிற்க வேண்டியதிராது. அருமை யான பாதுகாப்பை விவசாய இன்ஷூரன்ஸ் நல்குகிறது.

இன்ஷூரன்ஸ் நிறுவனமும் எப்படியும் நஷ்டம் அடைவது கிடையாது. நூறு ஏக்க ரின் இடையில் ஓர் ஏக்கர் நஷ்டம் அளிக்க லாம். ஆனால் நூறு ஏக்கருக்காக இன்ஷூ ரன்ஸ் கம்பெனி தலா ரூ. 45 வீதம் ரூ. 4500 வசூலிக்கிறது. இதில் 1500 போவ தால் ஒன்றும் பழுதில்லை. பாக்கி 3000 ரூபாய் நிற்கிறது. அத்தொகையும் தொழில் துறைகளில் முதலீட்டுக்குப் பயனாகிறது.

ஈ. ஐ. டி. பாரி கம்பெனியின் ஈரோடு அலுவலகத்தின் மானேஜர் திரு டி. வேங்கட ராமன், சத்தியமங்கலம் ஸ்டேட் பாங்கின் ஏஜண்ட் திரு எம். ஈ. எஸ். ராகவன் ஸ்டேட் பாங்கின் விவசாய அதிகாரி திரு எஸ். ராமு மூவரும் — விவசாய மக்களுக்கு உதவ வேண் டும், விவசாயத்தைச் சீர்ப்படுத்திக் காட்ட வேண்டும், அரசாங்கம் அளிக்கும் உதவிகளை வீணாக்காமல் விவசாயிகள் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதில் பெரு அக்கறை கொண்டு உழைப்பது ஓர் அதிசயக் காட்சி. இவர்களது பணிகளைச் சாதாரண குடி யானவர்கள் அகமும், முகமும் மலர்ந்து பாராட்டுகின்றனர். இப்படியொரு திட்டம் என்று சொன்ன ஒரு மாத காலத்துக்குள்ளே நூறு விவசாயிகளுக்கு மேல் பாலிஸி எடுத்துக் கொண்டு விட்டார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

சத்திய மங்கலத்தின் மங்களம் தேசத் துக்கே வழி காட்டட்டும்.



சென்னை வோல்ட்டாஸ் நிறுவனத்தைச் சேர்ந்த ஸ்ரீ T. V. கிருஷ்ணசுவாமி அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி மீனாக்ஷி M. Sc., க்கும் சிரஞ்சீவி எஸ். குருமூர்த்தி B. Com , A. C. A. (Chartered Accountant)க்கும் திருமணம் சென்னையில் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

[பெண்ணின் விரோதி சமூகம். ஒரு பெண்ணுக்கு மட்டுமல்ல, எல்லாப் பெண்களுக்குமே விரோதி அது: அந்த விரோதியை வெல்லவும் பெண் தான் முயல வேண்டும்.]



# பெண்ணின் விரோதி

## ருக்மிணி பார்த்தசாரதி

இந்தத் தனிமையை இதற்குமுன்னால் கல்யாணி உணர்ந்ததே இல்லை.

அவளைப் புரிந்து கொண்டு, அவளை அவளுக்காகவே வாத்ஸல்யத்தோடு நேசித்தவர்- அவளுடைய தந்தை — இறந்து ஒரு மாத காலம் கழிந்துவிட்டது.

அவர் தந்தையாக மட்டுமா இருந்தார்? தாயாகவும் அல்லவா திகழ்ந்தார்! அதனால் தான் 'உங்களோடு வாழ என் மனம் கூசுகிறது!' என்று அவள் தன் கணவனிடம் சொல்லிவிட்டு வந்தபோது, ஒரு பெண்ணின் கருணையோடு அவர் அவளுடைய மனக் கொதிப்பைப் புரிந்து கொண்டார். அதன் பிறகு, பல வருடங்கள் அவருடைய குழந்தையாக மட்டுமே உயிர் வாழ்ந்து விட்டாள்....

இப்போது அவரும் இல்லை.

''நான் உலகில் தனி!'' என்று அவள் வாய்விட்டுச் சொல்லிக் கொண்டாள். நெஞ்சில் துயரம் நிறைந்தது. ''அப்பா! உங்கள் முக தரிசனம் இல்லாமல் எப்படி என் வாழ்நாளைக்கழிப்பேன்!'' என்று துயரம் வெடிக்கக் கதறினாள்.

அவரைப் பொறுத்தவரை என்னவோ மரணம் விடுதலையாகத்தான் அமைந்தது. நேர்மையோடு வாழ்ந்தார். அதனால் சாவைப் பற்றிய அச்சம் அவரை வாட்டவில்லை. ஆனால் ஒரு வருட காலமாகவே — தடுக்கி விழுந்ததால் முதுகெலும்பு முறிந்து படுத்த படுக்கையாகிவிட்ட நாளிலிருந்தே — அவர் மரணத்தைத்தான் எதிர்நோக்கிக் காத்திருந்தார். ''நான் சீக்கிரம் சாக வேண்டும் என்று துடிக்கிறேன், அம்மா.... உன்னை விட்டுப் பிரிய வேண்டுமே என்ற ஓர் எண்ணம்தான் உயிரின் மீது முழு வெறுப்பு ஏற்படாமல் தடுக்கிறது!'' என்று அடிக்கடி சொல்வார்.

பொருளாதாரப் பிரச்னை எதுவும் கல்யாணிக்கு இல்லை. அவள் பெற்றோருக்கு ஒரே குழந்தை. நிலமும் வீடுமாக, அப்பா சௌகரியமாக வாழ்ந்தார். அருகிலிருந்த பள்ளியில் தலைமை ஆசிரியராகப் பணி புரிந்து ஓய்வு பெற்றார். மனத்தில் நிறைவு இருந்தது. அதனால் வாழ்வில் குறை இல்லை.

கல்யாணியும் அதே பள்ளியில்தான் இப்போது ஆசிரியையாக இருக்கிறாள். கங்காதரனோடு வாழ்வைப் பகிர்ந்துகொள்ள விரும்பாமல் அவள் பிறந்த வீடு திரும்பிவிட்ட போது தந்தையிடம், ''உங்களைப் போல் கல்வித் துறையில் ஈடுபட நான் விரும்புகிறேன்!'' என்றாள். பயிற்சிக் காலம் முடிந்த பிறகு அதே பள்ளியில் அவள் பணியேற்றாள்.

அப்போது அவளுக்கு வயது இருபது தான். இப்போதோ முப்பத்தைந்து நிறைந்து விட்டது. பதினைந்து வருடங்கள் வருத்தமோ, தாபமோ இல்லாமல் கழிந்துவிட்டன.

இனிமேல்தான் அவள் மனோபலத்தால் மட்டுமே வாழ்ந்தாக வேண்டும்.

கங்காதரனை விட்டுப் பிரிந்து விட்டபோது இப்படியொரு நாள் வரும் என்று கல்யாணி உணர்ந்துதான் இருந்தாள். ஆனால் மனத்தளவில் ஒரு விபத்தை எதிர்பார்ப்பதற்கும், அதே விபத்து நேர்ந்துவிடும் போது சமாளிப்பதற்கும் நடுவே எத்தனை பெரிய இடைவெளி இருக்கிறது!

கல்யாணி கங்காதரனை நினைத்துக் கொண்டாள்.

கங்காதரன் மீனாவின் கணவன்.

மீனாவின் கணவனாகத்தான் அவனைப் பார்க்கக் கல்யாணியால் முடிந்தது, எப்போதுமே. திருமணமாகிப் புகுந்த வீட்டில் அவள் அடி எடுத்து வைத்த அன்றே, கங்காதரன் அவளிடம் ஒளிவு மறைவின்றிச் சொன்னான்:

''கல்யாணி! ஒரு பொய்யின் அஸ்திவாரத்தின் மேல் நம் தாம்பத்திய வாழ்வை எழுப்ப நான் விரும்பவில்லை.... நான் ஒரு பெண்ணோடு என் வாழ்வைப் பகிர்ந்து கொண்டிருக்கிறேன்!''

அவள் முகத்தை அவன் கூர்ந்து நோக்கினான். அதிலிருந்த உணர்ச்சியின் முழு அர்த்தமும் விளங்காதவனாய்த் தொடர்ந்தான்:

''அவள் ஓர் ஏழைப் பெண்... மீனா என்று பெயர்....''

''நீங்கள் செய்தது துரோகமல்லவா?'' என்று அவள் நிதானமாகக் கேட்டாள்.

''இனிமேல் இப்படி நடக்காது, கல்யாணி! இனிமேல் உனக்கு நான் துரோகமே இழைக்கமாட்டேன்!''

''எனக்குத் துரோகமா? நீங்கள் இழைத்தது அவளுக்குத் துரோகம். உங்களை நம்பி அவள் தன் பெண்மையையே களங்கப்படுத்திக் கொண்டுவிட்டாள்... என் பெண்மை பரிசுத்தமாக இருக்கிறது!''

''ஆனால் நான் உலகறிய மணந்துகொண்டிருப்பது உன்னைத்தான்....''

''அதனால் என்ன? நாளைக் காலையே நான் என் பிறந்த வீடு சென்று விடுகிறேன்.... மீனாவை மணந்துகொண்டு நிறைவான வாழ்வை வாழ்ந்து காட்டுங்கள். அதுதான் எனக்கு நீங்கள் செய்யக்கூடிய பெருதவி!''

''தனி மரமாகவா வாழ்வைக் கழிக்கப் போகிறாய்? சமூகத்தைப் பொறுத்தவரையில் நீ மணமானவள். அறிந்தே கணவனை உதறுகிறாயே, உன் பெண்மை ஏங்காதா?''

''மணமான அன்றே நான் என் கணவனை இழந்தேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். என் பெண்மை ஏங்குமென்று உங்கள் சமூகம் நினைக்குமா? அந்தக் கணமே நான் துறவியாகிவிட வேண்டும் என்றுதானே எதிர்பார்க்கும்?''

அவன் ஆழ்ந்த துயரத்தோடு, ''உன் கணவனை நீ இழக்கவில்லை, கல்யாணி?'' என்றான்.

''உண்மைதான். நான் கணவனைப் பெறவேயில்லை. இழக்க எப்படி முடியும்? நான் உங்களைச் சகோதரனாக நினைத்து உங்கள் நன்மைக்காக ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன். எனக்கு விடுதலை அளியுங்கள். நீங்கள் மீனாவின் கணவன். என்றால் உங்களை வேறு எப்படியுமே பார்க்க முடியாது....''

கல்யாணி பிறந்த வீடு வந்துவிட்டாள், மறுகணமே. தந்தையிடம் நடந்ததைச் சொன்னாள். ஒரு வயதுக் குழந்தையாக இருந்தபோதே தாயை இழந்தவள் கல்யாணி. அவர் ஒரு தாயாரின் பரிவோடு அவளுடைய தீர்மானத்திலிருந்த நியாயத்தை ஆமோதித்தார்.

''என் தீர்மானம் அவரை அதிர வைத்தது, அப்பா! ஏனென்றுதான் புரியவில்லை!'' என்றாள் கல்யாணி.

''இது புரிவது கஷ்டமில்லை, அம்மா. ஆண் மகன் குற்றம் புரிந்தால் சமூகம் அவனை மன்னிக்கும். பெண் குற்றம் செய்யவே வேண்டாம். குற்றம் செய்திருக்கலாம் என்ற சந்தேகத்தின் பேரிலேயே அவளைத் தண்டித்து விடும். பெண்ணின் நிஜமான விரோதி சமூகம்தான்.....''

பிறகுதான் கல்யாணி, ஆசிரியைப் பயிற்சி பெற்று, பள்ளியில் ஆசிரியையாக அமர்ந்து விட்டாள்.

வாழ்க்கை நிர்மலமாகக் கழிந்தது. பள்ளியில் கற்பிப்பதில், இளம் தலைமுறையைத் தினம் சந்திப்பதில், அவள் ஆத்ம திருப்தி அடைந்தாள். தன்னை விதவையாகவே அவள் நினைத்துக் கொண்டாள். அதன்படியே தன் உணர்வுகளை உருவாக்கிக் கொண்டாள். இயற்கையாகவே அவள் உணர்ச்சிகளுக்கு அடிமையாகும் குணம் படைத்தவள் அல்ல. இதயத்தை வெல்வது அவளுக்குக் கடினமாக இல்லை.

மனத்தளவுகூட மாசுபடாமல் அவள் வாழ்ந்தாள். அவளால் அது சுலபமாக முடிந்தது.

ஒரு நாள், எதிர்பாராமல், கங்காதரன் அவளைக் காண வந்தான். தனக்கும் மீனாவுக்கும் ஒரு குழந்தை பிறந்திருக்கும் நற்செய்தியை அளித்தான். ''ஒரு சகோதர







''தண்ணீர் மூலம் ஓடும் மோட்டார் வண்டியை நாங்கள் கண்டு பிடித்தோம். ஆனால் குழாயில் தண்ணீர் வராது என்பதை நாங்கள் எதிர் பார்க்கவில்லை !''

னின் இதயத்தோடு நான் இதை உன்னிடம் சொல்ல வேண்டும் என்று மீனு என்னை விரட்டினான்!'' என்றான்.

கல்யாணி உண்மையான மகிழ்ச்சியோடு, ''என் வாழ்த்துக்கள்!'' என்றாள். பின், ''மீனுவை நீங்கள் எப்போது மணந்துகொண்டீர்கள்? எனக்கு அழைப்பே வரவில்லையே?'' என்றாள்.

''ஒருநாள் அவளைக் கோயிலுக்கு அழைத்துச் சென்றேன். பின், என் இல்லத்துக்கு அழைத்து வந்தேன். இதுதான் நாங்கள் புரிந்து கொண்ட திருமணம் !''

''இதைச் சமூகம் ஏற்காது... ஒரு ரிஜிஸ்தர் கல்யாணமாவது செய்துகொள்ளுங்கள்....''

''ஒரு குழந்தைக்குத் தந்தையான பிறகா?''

அதன் பிறகு அவன் எப்போதாவது வருவான், அவளைக் காண. அவளிடம் அவன் இதயத்தில் அன்பில்லை என்றாலும் ஒரு மரியாதை இருந்தது. அவளைத் தனக்குச் சமானமாக நினைத்துப் பேச அவனால் முடிந்தது. நிர்மலமான மனத்தோடு அவளைப் பார்க்க முடிந்தது.

ஒரு முறை தன் மனைவி மக்களையும் அழைத்து வந்து அவளுக்கு அறிமுகப்படுத்தினான் அவன். மீனு சம்பிரதாய அழகு கொண்ட பெண்ணாக இருந்தாள். உருண்டை முகம், சிவந்த நிறம், பெரிய கண்கள், நீண்ட கேசம்... இப்போது மூன்று மக்களின் தாய்.

மீனுவின் அழகுத் தோற்றம் அவள் எதிர் பார்த்ததுதான். ''இப்படி ஓர் அழகியின் வாழ்வு நிறைவாக அமைய நான்தான் காரணம்!'' என்று அப்போது நினைத்துக் கொண்டாள் கல்யாணி. இத்தனை நாட்கள், ''பெண்ணை நான்தான் மற்றொரு பெண்ணின் வாழ்வைச் சீராக்க வேண்டும்!'' என்ற லட்சியம் மட்டும் இருந்த மனத்தில், இப்போது பெருமையும் தோன்றிற்று. நெஞ்சம் இன்பத்தில் பூரித்துப் போயிற்று.

ஆனால், உண்மையில், அவள் லட்சியம், பெருமை, இன்பம், தூய தவ வாழ்க்கை எல்லாவற்றுக்கும் பின்னணியாக இருந்தது அப்பாவின் பக்க பலம்தான்..... ''என்னைப் புரிந்துகொள்ள அவர் ஒருவர் இருக்கிறார். அவர் ஒருவர் இருந்தால் போதும்!'' என்றுதான் அவள் நினைத்து வந்தாள்.

அப்பாவை இழந்த போதுதான் தன் வாழ்க்கையின் வெறுமையை அவள் உணரலானாள்.

அவள் இப்படியே தவ வாழ்க்கை வாழ்ந்து விடுவாள். பூவும் பொட்டும் இருந்தாலும் அவள் விதவைதான். ஆனால் வாழ்வின் அர்த்தம்தான் என்ன ? ஜனனம், மரணம்—எத்தனை வியர்த்தமானவை இவை ! அப்பா இருந்த வரையில் அவருடைய குழந்தை என்ற முறையில் அவள் வாழ்க்கைக்கு ஒரு பொருள் இருந்தது. இனி ?

பெண்ணின் விரோதி சமூகம். அவள் தனி மரம். சௌகரியமான பொருளாதாரம் கொண்ட தனி மரம். அந்தப் பொருள் மீது பேராசைப்பட்டுப் பலர் அவளை நேசிப்பதாய் நடிப்பார்கள். சமூகம் தன் விரோதி என்பதை அவள் மறக்கவே கூடாது.

அர்த்தம் இருக்கிறதோ, இல்லையோ, வாழ் நாளைக் கழித்துத்தான் ஆக வேண்டும். ஆசிரியை வேலை, புத்தகங்கள் காட்டும் மாய உலகம், சமையல், தையல், கோயில் விஜயம், பொழுதுபோக்குகள். நாட்களைக் கழிப்பது கஷ்டமில்லை. காலம் பறந்துவிடும்.... அதன் குணமே பறப்பது தானே !

கல்யாணி மனத்தைத் தேற்றிக் கொண்டாள்.

மனம் சோர்ந்து போகும்போதெல்லாம் மீனுவின் வாழ்வு மலர்ந்திருப்பது தன்னால் தான் என்று எண்ணி ஆறுதல் அடைந்தாள்.

அதன் பிறகு ஒரே ஒரு முறைதான் கங்காதரன் அவளைக் காண வந்தான். பெரியவர் மறைந்துவிட்ட செய்தியைக் கேட்டவன், ''தனியாகவா அந்த விபத்தைச் சமாளித்தாய் கல்யாணி ? நான் இருப்பதை மறந்து விட்டாயா ? எனக்குச் சொல்லி இருந்தால் நான் உதவிக்கு வந்திருக்க மாட்டேனா ?'' என்று ஆழ்ந்த துயரத்தோடு சொன்னான். 'நிஜமாகத்தான் இவருக்குச் சொல்லி அனுப்பலாம் என்று எனக்கு ஏன் தோன்றவில்லை?' என்று நினைத்து மனத்துக்குள் வியந்து போனாள் கல்யாணி.

வாழ்க்கை தொடர்ந்தது, நிர்மலமாக, சிக்கலோ பிரச்னைகளோ இன்றி....வேதனைக்கெல்லாம் பாசம்தான் காரணம். பாசமற்றவளுக்கு வேதனை ஏது ?

கல்யாணிக்கு வயது நாற்பதைக் கடந்து விட்டது. நாற்பதா ? அவளுக்கா? மனக் கவலைகள் இல்லாததாலும், சீரான வாழ்க்கை



**இந்திரா காந்தி கூறியது !**

ஓர் இந்தியர் லண்டன் தெருவில் காலி சிகரெட் பெட்டியைப் போட்டதற்கு அபராதம் கட்டினார். ரசீது கொடுத்தார்கள். அந்தக் காகிதச் சுருட்டுத் திரும்பவும் தெருவில் எறிந்தார்!

டெபொனேர் - பாலி

# ட்ரூ-டோன்
# ஹேர் கண்டிஷனர் உள்ளடங்கிய ஒப்பற்ற (ஹேர் டைய்) கேசச் சாயம்

ஒருசீராக எளிதில், இயற்கையாக உங்கள் கேசத்திற்குக் கருமையூட்டுவதோடன்றி, அதிலுள்ள ஹேர் கண்டிஷனர் உங்கள் கேசத்தை பளபளக்கும் மென்மையோடு படிமானமாக வைத்திருக்கிறது.




* தலை சிறந்த முடியலங்கரிப்பாளர்களால் உபயோகிக்கப்படும் கேசச் சாயம் (ஹேர் டைய்) இது.
* கேசப் பராமரிப்பிலே உலக வல்லுனர்களாம் **ஹெலன் கீர்ட்டிஸ்** என்ற அமெரிக்கக் கம்பெனியின் நிபுணத்துவத்தோடு ஆக்கம் பெற்ற கேசச் சாயம் இதுவே.

இயல்பான் கறுப்பு, கரும் சிவப்பு நிறங்களிலும், 2 அளவுகளிலும் வருவது
தனியாகக் கிடைப்பவை—
ட்ரூ-டோன் ஸ்டெயின் ரிமூவர் (கறை நீக்கி) ரப்பர் க்ளவ்ஸ் (கையுறைகள்), மற்றும் டின்ட் டெவலப்பர்.

தரமானதோர் தயாரிப்பு:
ஜே. கே. ஹெலன் கர்ட்டிஸ் லிமிட்.,
பம்பாய் 400 023

தென்னிந்தியாவுக்கான விநியோகஸ்தர்கள்:
**பாரி & கம்பெனி லிமிட்.**

everest/999/HC-tm

# ஒப்பற்ற வெள்ளைவெளேர்-
# சலவைக்கே ஸூப்பர் ஸர்ஃப்...

## ஒப்பற்ற வெள்ளைவெளேர்!

SUPER
Surf
washes whitest of all

அதி உன்னதமான துலக்கும் சக்தி படைத்தது ஸூப்பர் ஸர்ஃப். கண்மறைவான அழுக்கையும் அகற்றிவிடுகிறது. பிறர் பொறாமைப்படும் அளவுக்கு அதி உன்னதமான வெண்மை அளிக்கிறது உங்கள் துணிகளுக்கு. அதிசயமென்ன, இந்தியாவின் தலைசிறந்த ரகமாக விளங்குகிறது ஸூப்பர் ஸர்ஃப்!

---

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-SU-180-140 TH(R)



பூரி ஜகந்நாத க்ஷேத்திரத்தில் மஹோததி என்ற மகிமை வாய்ந்த சமுத்திரக் கரை ஸ்நான கட்டத்துக்கு எதிராக, ஸ்நானம் செய்தவுடன் தரிசனம் செய்து கொள்ளக்கூடிய விதமாக மூன்று கோயில்கள் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் ஆக்ஞைப்படியும் அனுக்கிரஹத்தாலும் உருவாகிக் கொண்டு வருகின்றன.

திருப்பணி வேலை கூடிய சீக்கிரம் முடிவடைந்து 11-3-75 மகாசிவராத்திரி அன்று ஸ்ரீ ஆதிசங்கரர் நான்கு சிஷ்யர்களுடனும், ஸ்ரீசைதன்யர், ஸ்ரீ ஜயதேவர், பத்மாவதி, ஸ்ரீ பாலகிருஷ்ணன் சிலைகள் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகமும் செய்யும்படி ஸ்ரீ பெரியவாள் ஆக்ஞை செய்திருக்கிறார்கள்.

இம்மாபெரும் பணி இனிதே முடிவடையப் பக்தர்கள் இயன்ற நிதியை அளித்து ஸ்ரீ ஜகத்குருவின் பரிபூரண அனுக்கிரகத்துக்கும் பாத்திராகுமாறு கோரப்படுகிறார்கள்.

நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி:

Chairman, Sri Sankara Bhagawad Pada Seva Samithi, Swarga Dwar, Puri (ORISSA)

---

வாழ்ந்ததாலும் அவள் இருபத்தைந்து வயதுப் பெண்ணைப் போலத்தான் இருந்தாள்.

ஒரு நாள்.

அவள் பள்ளியிலிருந்து திரும்பியபோது வாசலில் சிலர் காத்திருந்தார்கள்.

"நீங்கள்தானே மிஸஸ் கல்யாணி கங்காதரன்?"

"மிஸஸ். கல்யாணி கங்காதரன். எத்தனை அதிசயமாக ஒலிக்கிறது இந்தப் பெயர்! மீனாட்சி கங்காதரன். அதுதான் செவிக்கு இனிமையாக இருக்கிறது!" என்று நினைத்துக் கொண்டாள் அவள்.

"என்ன விஷயம்?" என்றாள்.

"மிஸ்டர் கங்காதரன் இன்று காலை இறந்து போய் விட்டார்..... அவர் வீட்டிலிருக்கும் பெண் உங்களை அழைத்து வரச் சொன்னாள்."

அவர் வீட்டிலிருக்கும் பெண்... அதாவது மீனா.... அப்படியானால்? இத்தனை வருடத் தாம்பத்திய வாழ்க்கைக்குப் பிறகு 'மனைவி' என்ற பதவிகூட அவளுக்கு இல்லையா?

கல்யாணியின் இதயம் சவுக்கடி விழுந்த மாதிரி துடித்தது. என்ன அநீதி இது! அவள் செய்த தியாகத்துக்குக் கடைசியில் இவ்வளவு தான் அர்த்தமா? கங்காதரனின் மரணச் செய்தி அவளை வருந்தச் செய்ததே தவிர, துயரக் கடலில் ஆழ்த்தி விடவில்லை. ஆனால் அழைப்பு வந்திருப்பதோ அவளுக்குத்தான், அதுவும் மீனாவிடமிருந்து!

அவள் உடனேயே புறப்பட்டு விட்டாள். மனத்தில் வேகம், சினம்.... "என்ன அநீதி! நான் இதைப் பொறுக்கமாட்டேன்!" என்ற ஆத்திரம்.

கங்காதரனை ஹாலில் கிடத்தியிருந்தார்கள். மூளையில் ஏதோ "ஸ்ட்ரோக்" என்று விவரித்தார்கள். மரணம் திடீரென்று, எதிர்பாராமல் சம்பவித்ததாம்....

ஆனால் கல்யாணி ஒரு கணத்துக்கு மேல் கங்காதரனைப் பார்க்கவில்லை. அழுது அழுது சோர்ந்தும் கண்ணீர் வற்றாமல் துயரம் வெடிக்கக் கதறிக் கொண்டேயிருந்த மீனாவைத் தான் பார்த்தாள்.....

மீனாவா இவள்? சிவந்த நிறமும் உருண்டை முகமுமாக இருந்தாளே, அந்த எழில் மங்கையா இவள்? நிறத்தில் சாம்பல் பூசினாற் போன்ற மங்கல்.... முகத்தில் கோடுகள்.... உடல் ஏன் இப்படி அழகற்றுப் போய்விட்டது? எப்படி இந்த நாற்பது வயதுக்குள் இப்படிக் கிழடு தட்டிப் போனாள் மீனா?

சட்டென்று கல்யாணிக்குப் புரிந்தது. தன் கணவனோடு வாழும் மனைவி அவனுடைய அன்பை மட்டும் பெறுவதில்லை. அவனுடைய சொல்லம்புகள், மன விகாரங்கள் எல்லாவற்றுக்குமே ஆளாகிறாள். அவனுடைய துன்பங்களுக்கும், அவனுடைய மக்களின் துன்பங்களுக்கும் அவளே சுமை தாங்கி. அவன் சேவையில் அவள் தன்னை அழித்துக் கொள்கிறாள்.

'நான் இந்த வயதில் இளமைத் தோற்றம் மாறாமல் இருப்பதற்கு என் தவ வாழ்க்கை தான் காரணம். மீனாவோ கங்காதரனுக்காகவே வாழ்ந்தாள். அவன் சேவையில் இழைபயானாள்!'

"அம்மா! மிஸ்டர் கங்காதரன் திடீரென்று இறந்ததால் உயில் எதுவும் எழுதவில்லை. தாலி கட்டின மனைவியான உங்களுக்குத்தான்......."

"பொறுங்கள்!" கல்யாணியின் குரல் கத்தியாய் வெட்டிற்று. ஒருமுறை மீனாவை ஆழ்ந்து பார்த்தாள். கண்களோடு கண்களை இணைத்து ஆறுதல் கூறினாள். பதினெட்டிலிருந்து பன்னிரண்டு வயது வரையில் இருந்த அவளுடைய மூன்று மக்களையும் பரிவோடு நோக்கினாள்.

பெண்ணின் விரோதி சமூகம். ஒரு பெண்ணுக்கு மட்டுமல்ல, எல்லாப் பெண்களுக்குமே விரோதி அது! அந்த விரோதியை வெல்லவும் பெண்தான் முயல வேண்டும்.

கல்யாணியின் குரல் தெளிவாக, ஸ்டாங்டாக ஒலித்தது: "மிஸ்டர் கங்காதரனும் நானும் மணமான உடனேயே பிரிந்துவிட்டோம். நான் என் சம்மதத்தை எழுதிக் கொடுத்தபின், அவர் மீனாட்சியை அதிக ஆடம்பரமின்றி, ஆனால் சம்பிரதாயப்படி மணந்து கொண்டார்..... திருமணம் எங்கள் கிராமத்தில் நடந்ததால் இங்குள்ளவர்களுக்குத் தெரியவில்லை. அதனால், மீனாட்சி கங்காதரனின் மனைவி.... நான் அவருக்கு எந்தவிதத்திலும் சம்பந்தப்பட்டவளில்லை. அவருடைய எல்லா ஐசுவரியமும் அவளுக்கும் அவள் மக்களுக்குமே உரியது. எனக்கு அதில் உரிமையில்லை!"

# இப்போது!

## ஸ்பென்ஸர்ஸ் டீ

ருசியும் மணமும் குன்றாமலிருக்க
அழகான, புதிய அட்டைப் பெட்டிகளில்
கிடைக்கிறது!







நீலகிரி மலைச் சிகரங்களின்.
நிகரற்ற டீ.
சுவை மிகுந்தது.
புதுச் சுவை மாறாதது!

**ஸ்பென்ஸர் & கோ. லிமிடெட்**
சென்னை மற்றும் கிளைகள்

FDS ST 2100 TM



### மீனாட்சியின் கருணை!

அவள் குடும்பத்தினர் எனக்குப் பல வருடங்களாகப் பரிச்சயம். முப்பத்திரண்டு வயதிற்குள் பல வேலைகளில் சேர்ந்தும் ஒன்றிலும் நிலையாக நிற்க முடியாமல் வாழ்க்கை சலிப்புத் தட்டிவிட்டிருந்தது. அந்த நிலையில் என்னிடம் அவள் அன்று இரக்கம் கொண்டாள். அந்த 'இரக்க நிலையே' நாளடைவில் மாறிப் பின்னர் 'காதலா'கப் பரிணமித்தது.

நாங்கள் ஒருவருக்காகவே மற்றவர் படைக்கப் பட்டு விட்டதால், அவளுடைய அண்ணன் கல்யாணமும், அக்கா கல்யாணமும் இனிது நிறைவேற, பலவித விவாதங்களுக்குப் பிறகு, எங்கள் கல்யாணமும் நடந்தேறியது.

ஒடிசலான தேகமும், சுறுசுறுப்பும், இனிமையான குரலும், பாடும் தேர்ச்சியும் பெற்றுள்ளவள் என் மனைவி.

வாழ்க்கையில் பிடிப்பு இல்லாமல் அலைந்து கொண்டிருந்த எனக்கு, வாழ்க்கை இனிக்க ஆரம்பித்ததே திருமணத்திற்குப் பிறகுதான். இன்று அது ஓரளவு அமைதியாகப் போய்க் கொண்டிருப்பதற்கு என் மனைவியின் குணங்களும், அவளை எனக்குத் தந்த தேவி மீனாக்ஷியின் கருணையுமே காரணங்களாகும்.

எம். என். வெங்கட்ராமன்
மதுரை - 1

# மோகம் 30 நாளா?

### தர்ம வழியில்....

என் வயது 67. இன்றைய அராஜகம், அஸத்தியம், விலை உயர்வு இவைகளால் நடுநடுங்கி, சதா பகவான் திருவடிகளை உடனே அடைய வேண்டி ஆழ்வார் ஆசார்யாள் பாசுரங்களைத் தினமும் அநுஸந்தானம் பண்ணி வருகிறேன். நடமாடும் தெய்வமான ஸ்ரீமத் காஞ்சிப் பெரியவாளுக்கு அடிக்கடி விண்ணப்பித்தும் பிரஸாதம் கிடைத்து ஓரளவு தைர்யம் அடைந்து வருகிறேன்.

என் குடும்பம் மிக மிகப் பெரியது. என் மனைவியின் பெயர் ஸ்ரீமதி ஜயலக்ஷ்மி. 1929ல் விவாஹம். ''லிப்கோ'' பதிப்பகத்தை 1929ல் ஸ்தாபிதம் செய்ததாலும், பல திருக்கோயில்களுக்கு அந்நாளிலே ஆடிட்டராக இருந்ததாலும் அடிக்கடி வெளியூர் போக வேண்டியிருந்தது. எனவே, அன்று முதல் இன்று வரை, என் மனைவி கஷ்டங்கள் எதையும் எனக்குக் காட்டாமல் இம்மாபெரும் குடும்பத்தைக் காப்பாற்றி வருகிறாள். ஸ்திரீகளால் தான் தெய்வ பக்தி வளரும், குடும்பம் சரியாகப் பரிபாலிக்கப்படும் என்பதற்கு என் மனைவி ஓர் அத்தாட்சி ஆனதால் இதை எழுதுகிறேன்.

நான் இப்போது எவருக்கும் பயனில்லாத சிறகொடிந்த பறவையாகி, நம்மாழ்வார் திருவாக்குப் பிரகாரம், ''தீயோடு சேர்ந்த மெழுகு போல உருகி'' வாழ்ந்து வரும் சமயம் என் மனைவி தான், தைர்யம் இழக்காமல், தர்ம நெறிகள் தவறாமல் இந்த மாபெரும் குடும்பத்தைக் காப்பாற்றி வருகிறாள் என்பதை நன்றி மனப்பான்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஸ்ரீமத் காஞ்சி பெரியவாள் அநுக்கிரஹத்தால் நாட்டுக்கும், நம் மதத்துக்கும் பல நற்பணிகள் செய்துள்ளேன்; அதற்கெல்லாம் என் மனைவி உறுதுணையாக இருந்து வந்திருக்கிறாள்.

-வி. கிருஷ்ணசாமி சர்மா
தியாகராயநகர், சென்னை

### ஹம்ஸதேவதை!

தாயும் வெறுக்கும் நோய்வந்(து) அலைக்க
தூயவள் தொண்டுகள் நேயம் வளர்க்க
மைத்துனி சிறுபெண் மனைவி யாயினள்
மேளம் விருந்து கேளிக்கை ஏதுமில்!
ஷண்முக நதியினில் குளித்தாள், நகைத்தாள்
கோயிலில் குனிந்து தாலியை ஏற்றாள்!
இருப(து) ஆண்டுகள் ஏகியும் இன்றும்
நவில்தொறும் நூல்நய மாகஉள் ளனளே!
கற்றிலும் எரிமலை கக்கினும் இவள்முகம்
பூத்தட லானதால் பாலைகள் கட்டில!
கசப்பும் கார்ப்பும் கலந்ததே அறுசுவை
எந்த நிலையிலும் இவள்நிலை இனிப்பே!
இவளும் நானும் எதிர்த்த(து) ஒரேமுறை!
உளம்சற்று விலகினேன். உடன்நான் இயற்றிய
'வேலி ருக்கையில் மயிலி ருக்கையில்
வேறு துணையும் வேண்டுமோ' என்னும்
பாடலிசைத் தட்டைப் பலமுறை கேட்டுத்
தாரை தாரையாய்க் கண்ணீர் வடித்தனள்
சென்ற சுவடு தெரியாது திரும்பினேன்!
அன்று முதலாக அவள்பிள்ளை யாயினன்!
உடலால் அமுதம் உணர்வால் அன்னம்
பெயரோ ஹம்ஸம் வேத மந்திரம்!
இவளோர் தேவதை என்பூர்வ புண்யமென்!

-உளுந்தூர்ப்பேட்டை சண்முகம்
சிதம்பரம்







## அவள் விரும்பிய பொருள்!

முதல் பத்தாண்டு காலத்துக்குள் வரிசையாக எங்களுக்கு நான்கு பெண் குழந்தைகள். தஞ்சை மாவட்டத்தில் பத்து ஏக்கரா நன்செய் பகுதிக்கு நான் தான் முதல் வாரிசு. உடன்பிறந்த என் ஆறு சகோதர சகோதரிகளுக்காக எனக்கு உண்டான பங்கையும் விட்டுக் கொடுக்க என் அன்னை வேண்டிய போது மனப்பூர்வமாக ஒத்துக் கொள்ளச் செய்தாள்.

இந்த இருபது ஆண்டு நிறைவில், அவள் கல்யாணத்தில் போடப்பட்ட அந்த பாட்டுப் பவுன் கழுத்துச் சங்கிலியை இத்துடன் பதினேழாந் நகையாகக் கழற்றித் தந்து பள்ளிச் செலவுகளின் படிப்பில் அக்கறை காட்டுகிறாள். அந்த அணிகலன் சேர்ந்தாற் போல் ஒரு மாதம் கூட எங்களிடம் இருந்ததில்லை. அவளுக்கு நகையில் மோகமில்லை.

ஒருநாள் தற்செயலாக அவளைக் கூர்ந்து நோக்கிய எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவள் கழுத்தில் தாலிச் சரட்டில் காணப்பட்டது ஒரு திருமாங்கல்யமே. ஆம், மற்றொன்று விட்டுப் போய்ப் பழுதாகிப் பெட்டியில் கிடந்தது. அதைக் குறித்துக் கவலையுற்ற என்னைப் பின்வருமாறு தேற்றினாள்.

"உங்களைத் தவிர வேறு ஒரு பொருளையும் நான் விரும்பவில்லை. நீங்கள் திடமாக இருந்தாலே போதும்."

வெ. சுப்பிரமணியம்
ஹைதராபாத்



## மாமியார் மெச்சிய மருமகள்!

எங்கள் திருமணம் பெற்றோர் பார்த்து ஏற்பாடு செய்ததுதான். நாங்கள் இருவரும் ஒருவரை ஒருவர் திருமணத்துக்கு முதல் நாளன்றுதான் (மாப்பிள்ளை அழைப்பு) பார்த்துக் கொண்டோம்.

சில ஏஜன்சிகளை எடுத்துக் கொண்டு மதுரையில் 1966 ஏப்ரலில் 'பாபு அண்ட் போவா' என்ற பெயரில் என் சொந்தக் கம்பெனியை ஆரம்பித்து இன்னமும் நடத்தி வருகிறேன்.

இப்பவும் எனது நிறுவனத்தில் காரியதரிசியாக இருந்து கடிதப் போக்குவரத்து போன்ற பல வேலைகளைப் பார்ப்பது என் மனைவிதான். என் மனைவியை என் தாயாரே மெச்சியிருக்கிறாள் என்றால் (மாமியார் மெச்சிய மருமகள்) அவளிடம் என் அன்புக்கும் ஆசைக்கும் எப்படிக் குறை உண்டாகும்? இன்ப துன்பங்களை நன்கு ஆராய்ந்து, பகிர்ந்து ஆவன செய்வதால் இதுவரை எங்களுக்குப் பெரிய கவலையோ கஷ்டமோ நேர்ந்ததில்லை. கவலை கஷ்டங்கள் இல்லாததால் எங்கள் உடலோ, உள்ளமோ முதுமைக்கான அறிகுறிகளைக் காட்டவில்லை. மேலும் எங்களுக்கு என்று சந்ததி ஒன்றை ஆண்டவன் அளிக்காததால் ஊரார் குழந்தைகளை ஊட்டி வளர்க்கும் பாக்கியம் எங்களுக்கு இருக்கிறது. இதன் பொருட்டு நாளடைவில் இந்நகரில் குழந்தைகளுக்கான பிரத்தியேக "கிளப்" ஒன்றை நிறுவத் திட்டமிட்டு வருகிறோம்.

— கே. எஸ். கே. மூர்த்தி, மதுரை

## வேப்ப எண்ணெயும் விருப்ப பாடமும்

ஷாபி இமாம் என்ற அறிஞர் ஒருவர் சமய நெறி பயில்வதற்காக எகிப்து சென்றபோது ஒரு கிழவியின் வீட்டில் தங்கித் தமக்கு உண்ண உணவும் இடமும் தருமாறு வேண்டிக் கொண்டார். அவளும் இணங்கினாள். முதல் நாள் அவருக்குச் சாப்பிட ரொட்டியும் சிறிது எண்ணெயும் கொடுத்தாள். எண்ணெயைத் தொட்டுக் கொண்டு ரொட்டியை அவர் சாப்பிட்டு வெளியே சென்ற பிறகுதான் ஆலிவ் எண்ணெய்க்குப் பதிலாக வேப்பெண்ணெயை வைத் தவறாக வைத்தது கிழவிக்குத் தெரிந்தது. "சரிதான். அவருடைய ஊரில் வேப்ப எண்ணெய் வைத் தொட்டுக் கொண்டுதான் சாப்பிடும் வழக்கம் போலிருக்கிறது" என்று எண்ணி அவருக்கு எப்பொழுதும் ரொட்டியுடன் வேப்ப எண்ணெயையே கிழவி வைத்து வந்தாள். இவ்வாறு ஆறு ஆண்டுகள் ஓடிவிட்டன. ஷாபி இமாம் ஓதி முடித்து வீட்டுக் கிழவியிடம் தாம் சொந்த ஊருக்குப் போவதாகச் சொன்னார். கிழவி வழக்கம்போல் ரொட்டியுடன் வேப்ப எண்ணெயை வைத்தாள். ரொட்டியை வாயில் வைத்ததும் 'தூ, தூ' என்று துப்பினார் ஷாபி இமாம். இப்பொழுதுதான் அவரது நாவில் வேப்ப எண்ணெயின் கசப்பு தெரிந்தது! இது வரையில் அவருடைய கவனம் முழுவதும் படிப்பில் சென்றதால் வேப்ப எண்ணெயின் கசப்பே தெரியாமல் இருந்தது.'

— "வழி காட்டும் ஒளிவிளக்கு" நூலிலிருந்து.
— அ. பி. சாந்தா





## பட்டதாரி பட்ட பாடு!

ஆங்கில நடிகர் சர் ஹென்றி இர்விங் ஒரு விருந்துக்குச் சென்றிருக்கும்போது பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்ற பட்டதாரி ஒருவர் அவரை அவமானப் படுத்த நினைத்தார். "தாங்கள் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் படித்திருக்கிறீர்களா?" என்று உரக்கச் சப்தமிட்டுக் கேட்டார். உடனே இர்விங், "இல்லை. ஆனால் என்னுடைய செயலாளர் அங்கு படித்திருக்கிறார்" என்று சட்டென்று பதில் சொன்னார். இதைக் கேட்டவுடன் பட்டதாரி முகத்தில் ஈயாடவில்லை!

— "வழி காட்டும் ஒளிவிளக்கு" புத்தகத்திலிருந்து
— அ. பிச்சை

நல்ல கருத்துள்ள கதை, ஏ. எஸ். பிரகாசத்தின் சிந்திக்க வைக்கும் சிறப்பான வசனம் இரண்டும் சேர்ந்து ஏ. எல். எஸ். புரொடக்ஷன்ஸின் இப்படத்தை வரவேற்கச் செய்கின்றன.

சினிமா நடிகர் ஜெய்சங்கரின் மேல் ஜெயா என்ற பள்ளி மாணவி காதல் கொண்டு கிட்டத்தட்ட பைத்தியமாகி விடுகிறாள். அந்தப் பைத்தியத்தின் தோழி இன்னும் ஒரு படி மேலே சென்று வீட்டைவிட்டே ஓடிப் போய், தன்னையே இழந்து கன்னித் தாயாகும் அவல நிலையை அடைகிறாள். கடைசியில் விஷயம் அறிந்த [illegible], ஜெயாவின் சினிமாப் பைத்தியத்தைத் தெளிய வைத்து அவளை வாழ வைக்கிறார்.

சினிமா, ஒரு மாயை; ஒரு பிரமை; சினிமாவில் வரும் சம்பவங்களும், பாத்திரங்களும் வெறும் நிழல்கள் என்னும் உண்மையை மிகவும் அழகாக எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

பள்ளி மாணவியாக வந்து வகுப்புக்கு வராத மாணவிகளுக்கு 'ப்ராக்ஸி' கொடுப்பதை ஒரு தொழிலாகவே செய்யும் குமாரி சச்சு தோன்றும் போதெல்லாம் ரசிகர்களின் ஆரவாரமான வரவேற்பைப் பெறுகிறார்.

அண்ணன் மேஜர் சுந்தரராஜனுக்கு ஏற்ற அண்ணி சௌகார் ஜானகி. இருவருமே படத்தில் முக்கியமான பாத்திரங்கள். கண்ணீரில் கரைந்து போகும் சௌகார் ஜானகிக்கு, கண்டிப்பிலும் கம்பீரத்திலும் சிறிதும் குறைந்துவிடவில்லை, சுந்தரராஜன். மனைவியையும் தங்கையையும் வீட்டை விட்டு விரட்டிவிட்டு, ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நிமிஷத்துக்கு நிமிஷம் மங்காமல் நிலைத்து,



# சினிமாப் பைத்தியம்

சினிமாப் பைத்தியம் ஜெயாவாக வரும் ஜெயசித்ரா, பள்ளி மாணவியாக வந்து வகுப்புக்குக் 'கட்' அடிப்பதிலும், அண்ணிக்கும் அண்ணனுக்கும் 'கடுக்காய்' கொடுப்பதிலும் படு கட்டியாகத் திகழ்கிறார். ஜெய்சங்கருக்குத் தன் வீட்டில் வரவேற்பும், விருந்தும் அளித்துக் குழைந்தபோதும், கடைசியில் உண்மைகளை உணர்ந்து, மனம் திருந்தி நெகிழ்ந்தபோதும் அருமையாக நடித்திருக்கிறார்.

கமலஹாஸன், ஜெயாவின் கரம் பற்றுபவன் — ஆனால் அதற்குள்ளேதான் அவருக்கு எத்தனை சங்கடங்கள்!

சினிமாப் பைத்தியம் ஜெயாவின் தோழியாக வந்து அவளிடமே சவால் விட்டுக் கடைசியில் சங்கடமான நிலையில் அவளைச் சந்தித்துக் கண்ணீர் விடும் பாத்திரத்தில் பி. ஆர். வரலக்ஷ்மி நன்கு சோபிக்கிறார்.

மனம் கலங்கியபோதும் பிடிவாதத்தைச் சற்றும் விட்டுக் கொடுக்காமல் சமாளிக்கும்போது மேஜர் சுந்தரராஜனின் நடிப்பு தனித்தன்மை பெற்று விடுகிறது.

ஜெயலலிதாவும் சிவாஜி கணேசனும் கௌரவ நடிகர்களாக வந்து சில நிமிஷங்களே தோன்றி அவர்கள் கௌரவத்துக்குச் சிறிதும் பழுதில்லாத முறையில் நடிக்கிறார்கள்.

சுவையான பல சம்பவங்களையும், நெகிழ வைக்கும் பல காட்சிகளையும் கொண்டு இப்படம் பிரமாதமாயிருந்தாலும் ஹிந்தியில் வந்து பெரும் புகழ் பெற்ற ''குட்டி''யைப் பார்க்காதவர்கள் மட்டும்தான் இப்பாராட்டுதலில் கலந்து கொள்ள முடியும்! தமிழ்க் கதையைப் படமாக்கி, தரத்தில் உயர்ந்து தனிப்பட்ட முறையில் புகழ் பெறும் நாள் எந்நாளோ?

இது வி. சீனிவாசனின் சிறப்பான டைரக்ஷனில் வளர்ந்துள்ள

காந்தன்

# தினசரி உங்கள் உடலுக்குத் தேவை இந்த 23 அத்தியாவசிய ஊட்டச் சத்துக்கள்.




CMGC-6-216 TM

# காம்ப்ளான்
## இந்த 23-ஐயும் தருகிறது.

புரதம்
திசுக்களையும் செல்களையும்
உருவாக்க, பாதுகாக்க
லிப்பிடுகள்
பொங்கிப் பெருகும் சக்திக்கே
கார்போஹைடிரேட்
சக்தி மிகுந்த உடல் வலிமைக்கே
கால்ஷியம்
ஆரோக்கியமான பற்கள்,
எலும்புகளுக்கு
பாஸ்பரஸ்
உடல் சுரப்பிகள், பற்கள் எலும்புகளுக்கு
சோடியம்
இரத்தம் நன்முறையில் செயலாற்ற
குளோரைடு (Cl வடிவில்)
தசை இயக்கத்திற்கு,
பிடிப்புகளைத் தவிர்க்கும்.
பொட்டாஷியம்
மனத் தளர்ச்சி,
தசை அயர்ச்சிக்கெதிராகப் போராட
இரும்புச் சத்து
ஆரோக்கியமான ரத்தத்திற்கே
அயோடின்
தைராய்டு சுரப்பி தரமாக இயங்க
வைட்டமின் ஏ
ஆரோக்கியமான
கண்களுக்கு
வைட்டமின் பி1
வளர்ச்சி,
உறுதியான
நரம்புகள்,
'பெரி-பெரி' நோய்
பிடிக்காதிருக்க



ரிபோஃப்ளேவின்
ஆரோக்கியமான வாய்,
நாக்கு, உதடுகள், கண்களுக்கு
நிகோடினமைடு
ஒளிவீசும் ஆரோக்கியமான
சருமத்திற்கே
கால்ஷியம் பென்டோதெனேட்
நரம்புகளையும் தசைகளையும்
வலுப்படுத்த
கோலின்
கல்லீரல் ஆரோக்கியமாக இயங்க
பைரிடாக்ஸின் (B6)
தசைகளை இளைப்பாற்ற
வைட்டமின் பி12
இரத்த சோகை பீடிக்காதிருக்க
ஃபாலிக் அமிலம்
புதிய இரத்த செல்களை உருவாக்க
வைட்டமின் ஸி
நோயெதிர்ப்புச் சக்தியைப் பெருக்கி,
ஸ்கர்வி நோய் வராதிருக்க
வைட்டமின் டி
உறுதியான பற்கள்,
எலும்புகளுக்கு
வைட்டமின் ஈ
கரு வளர்ச்சிக்கு
வைட்டமின் கே
இரத்தம் இயற்கையான
முறையில் உறைய உதவும்
இதர சிறு சிறு பொருட்கள்
வைட்டமின்களை உடல்
உறிஞ்சிக்கொள்ளவும்,
சுரப்பிகள் நன்கு இயங்கவும்
உதவும்.

**பால் சேர்க்காமலேயே பருகலாம்!**

காம்ப்ளான் வளரும் குழந்தைகள்,
சுறுசுறுப்பான இல்லத்தரசிகள்,
பரபரப்புடன் இயங்கும் அலுவலாளர்கள்,
கருத்தரித்த தாய்மார்கள், பாலூட்டும் அன்னையர்,
வயது முதிர்ந்தோர், பிணியாறுவோர்
முதலியவர்களுக்கு சாலச் சிறந்தது.




**பாலையும் விட இன்னும் அதிகமான வைட்டமின்கள், புரதம், கால்ஷியம், இரும்புச் சத்து மற்றும் இதர ஊட்டச் சத்துக்களை காம்ப்ளான் அளிக்கிறது.**

ஒப்பிட்டுப் பாருங்கள்:
ஒரு கோப்பை காம்ப்ளான் (33 கிராம்),
ஒரு கிளாஸ் பால் (200 மி.லி.)

உலகெங்கும் உபயோகிக்கப் படுவது—
**க்ளாக்ஸோ**
ஆராய்ச்சியில் உருவானது.

# இன்னும் என்ன வேணும்?

— தரஜா —

"அம்மா! அம்மா!"

"யாரம்மா நீ?"

"இந்த வீட்டில் சமைப்பதற்கு ஆள் வேண்டும் என்று சொன்னார்கள்."

"ஓ! வேலை கேட்டுக் கொண்டு வந்திருக்கிறாயா? சமையல் வேலையிலே எத்தனை வருஷங்கள் அனுபவம் உண்டு உனக்கு?"

"பதினெட்டு வருஷங்கள் அம்மா!"

"சமையல் வேலையைத் தவிர இன்னும் சில வேலைகளும் செய்தாக வேண்டும்.... கடைகண்ணிக்குப் போய் வருவது, காய்கறி வாங்குவது எல்லாமே நீதான் பார்த்துக் கொள்ள வேண்டும்...."

"சரியம்மா ...."

"தினமும் பால் டிப்போவுக்குப் போய், பாலும் வாங்கி வர வேண்டும் — இரண்டு வேளையும்....."

"செய்கிறேன் அம்மா...."

"இந்த வீட்டில் வேலைக்காரி கிடையாது. எனவே, பாத்திரங்களைத் தேய்ப்பதுடன் — வீட்டையும் நீதான் பெருக்க வேண்டும்."

"சரியம்மா...."

"தினமும் எல்லோருடைய துணிகளையும் துவைத்து, இஸ்திரி போட்டு வைக்க வேண்டும்....."

"செய்கிறேனே!"

"தோட்டக்காரன் இருக்கிறானே — அவன் படு சோம்பேறி! செடிகளுக்கெல்லாம் தண்ணீர் ஊற்றவே மாட்டான். அதையும் நீயே....!"

"கவனித்துக் கொள்கிறேனம்மா."

"குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்குக் கொண்டு போய் விடணும்; அழைத்துக் கொண்டு வரணும்!"

"இதென்னம்மா பிரமாதம்!"

"அநாவசியமாகத் தையற்கூலி கொடுப்பதென்றால் எனக்குப் பிடிக்காது.... வீட்டிலேயேதான் எனக்கும் குழந்தைகளுக்குமான டிரஸ்களைத் தைத்தாக வேண்டும்... மிஷின் இருக்கிறது.... உனக்குத் தைக்கத் தெரியுமோ....?"

"தையல் கிளாஸிலே சேர்ந்து பாஸ்கூடப் பண்ணியிருக்கிறேனம்மா ..."

"குழந்தைகளுக்குச் சாயந்திர வேளையிலே பாடம் சொல்லிக் கொடுக்கணும்; கதை, கிதை எல்லாம் சொல்லணும்...."

"இது ஒரு பிரமாத வேலையா என்ன?"

"முக்கியமான விஷயம் சொல்ல மறந்து விட்டேனே!.... தினமும் குழந்தைகளை நீதான் குளிப்பாட்டிவிடணும்.... டிரஸ்ஸாம் செய்து விடணும்....."

"ஓ! செய்கிறேனம்மா...."

"கார் ஓட்டத் தெரியுமா உனக்கு?"

"என் கணவரே ஓர் ஒர்க்ஷாப் வைத்திருக்கிறார்..... அதனாலே எனக்கு டிரைவிங்கும் தெரியும்....."

"நல்லதாப் போச்சு.... சாயந்திரம் என் வீட்டுக்காரர் ஆபீஸிலிருந்து வந்த பிறகு என்னையும், குழந்தைகளையும் நீதான் நம்ம காரிலே வெளியே அழைத்துக் கொண்டு போகணும். டிரைவர் கிடையாது. இங்கே!"

"ஓ! பேஷாக அழைத்துக் கொண்டு போகிறேன்!"

"எனக்கு லேடீஸ் கிளப் வேலை வேறு எக்கச்சக்கமாக இருக்கும்.... நான்தான் கிளப் செக்ரட்டரி... லெட்டர் கொடுத்தால் ஒழுங்காக டைப் செய்து தர முடியுமா உன்னால்?"

"டைப்ரைட்டிங் ஹையர் பாஸ் பண்ணியிருக்கேனம்மா..."

"வெரிகுட்! அந்தக் கவலையும் விட்டது... இன்னும் ஒரே ஒரு விஷயம் கேட்கணும், உன்கிட்டே! நம்ம வீட்டுப் பம்ப் ரிப்பேர் ஆகி மூணு மாசம் ஆகிறது.... கிணற்றிலே தான் நீ தண்ணீர் இழுக்கணும்.... ரொம்பவும் அதிகமில்லை..... ஒரு நாளைக்கு நூறு குடம் இழுத்தால் போதும்.... முடியுமா உன்னால்?"

"முடியாமல் என்னம்மா?"

"அப்போ இந்த நிமிஷத்திலேயிருந்து நீதான் இந்த வீட்டுச் சமையல்காரி...."

"அம்மா! எனக்கு ஒரு சந்தேகம்..... கேட்கலாமா?"

"கேளேன்!"

"நம்ம தோட்டத்து மண் வாகு எப்படியம்மா?"

"ஏன்? எதற்காக மண்ணைப் பற்றிக் கேட்கிறாய்?"

"இல்லை.... நல்ல மண்ணாக இருந்தால், நீங்கள் இப்போது சொன்ன எல்லா வேலைகளையும் செய்து முடித்த பிறகு மிச்சம் இருக்கிற நேரத்திலே பொம்மை ஏதாவது பண்ணி உங்க குழந்தைகளுக்குக் கொடுக்கலாமே என்பதற்காகக் கேட்டேன்! அவ்வளவுதான்!"

வீட்டுக்கார அம்மாள் மூர்ச்சையானாள்!

(மூலம்: ரஷ்யக் கதை)



Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran



# சிங்கப்பூருக்கும், அதற்கப்பாலும் சென்றிட
# சிறப்பான ஸர்விஸ்

வெள்ளி பகல் 11-30 மணிக்கு சென்னையிலிருந்து புறப்பாடு—
தொடர்ந்து ஸிட்னி அல்லது மெல்போர்ன் அல்லது பெர்த். மீண்டும், ஞாயிறு பகல் 1-10—
தொடர்ந்து ஸிட்னி, மெல்போர்ன்.

சுகபோகமுடன் உமக்கென்றே பறப்பவை எங்கள் B747*, B707 சூப்பர்ஜெட்டுகள்;
பணிவிடையின் தரமோ இதர ஏர்லைன்களையும் வியக்கவைக்கும்.

சிங்கப்பூரிலிருந்து பெர்த் நகருக்கு வாரம் 3 முறைகள்;
ஸிட்னிக்கு 6, மெல்போர்னுக்கு 4.

கோலாலம்பூருக்கும் எஸ்ஐஏ இணைப்புகள் உடனுக்குடன் உண்டு;
இந் நகரங்களுக்கும் வசதியான இணைப்புகள்: ஜகார்ட்டா,
பேங்காக், ஹாங்காங், டெய்பெய், டோக்கியோ,
ஒஸாகா, மனிலா.

*சிங்கப்பூரிலிருந்து.

**சிங்கப்பூர் ஏர்லைன்ஸ்**
வான் வீதியிலே உமக்கோர் சிங்காதனம்

எஸ் ஐ ஏ, நரிமன்-பாயிண்ட், பம்பாய்-400 021. போன்: 250951. டெலெக்ஸ்: 011-3887.
எஸ் ஐ ஏ, 36D, மவுண்டு ரோடு, சென்னை-600 002. போன்: 811789, 83917, 83849. டெலெக்ஸ்: MS 7278.

137 BR TM

